சேசுவின் இராச்சியம் வரும்படியாக மாதாவின் இராச்சியம் வருக!
- அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்



"நீயாவது எனக்கு ஆறுதலளிக்க முயற்சி எடு."

# மாதா பரிகார மலர்


மே & ஜூன் - 2022
மலர் 43 இதழ் 5 & 6


## இந்தியாவின் அர்ச்சிஷ்டப் பட்டம் பெற்ற முதல் பொதுநிலையினரான



## வேதசாட்சி தேவசகாயம் பிள்ளையே, எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

## ஆன்ம குருவிடமிருந்து ...

## "மாதா வழியாக சேசுவிடம் செல்வோம்"

சேசு மரி சூசையில் மிகவும் பிரியமானவர்களே,

இந்த **"மாதா பரிகார மலர்"** இதழ் தங்களின் கரங்களில் கிடைக்கும்போது தேவ மாதாவின் வணக்க மாதத்தைப் பக்தியுடன் நீங்கள் முடித்திருப்பீர்கள். தற்போது தேவ மாதாவின் கரங்கள் நம்மை சேசுவின் திரு இருதயத்திடம் அழைத்து வந்துள்ளன. ஜூன் மாதமானது, சேசுவினுடைய திருஇருதயத்தை விசேஷமாக நேசிக்கவும், அதனுடைய புண்ணியங்களை நாம் கடைப்பிடிக்கவும் நமது பரிசுத்த தாயாகிய திருச்சபையால் ஏற்படுத்தப்பட்ட மாதமாகும். ஏனெனில் திருச்சபையைவிட மேன்மைமிக்க ஆசிரியர் இவ்வுலகில் நமக்கு கடவுளால் கொடுக்கப்படவில்லை.

நமதாண்டவராகிய சேசுநாதர் தனது மோட்ச ஆரோகணத்திற்குப் பிறகு நமக்கு, கண்களுக்குப் புலப்படாத, நமக்காக இடைவிடாது பரிந்து பேசும் அர்ச். தமத்திரித்துவத்தின் மூன்றாம் ஆளாகிய இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரனையும், **"மாதா வழியாக சேசுவிடம்"** நம்மைக் கரம்பிடித்து நடத்திச் செல்லும் கண்ணுக்குப் புலப்படும் நம் தாயாகிய பரிசுத்தத் திருச்சபையையும் நமக்குத் தந்துள்ளார். இதற்கு நன்றியுடையவர்களாக இருப்போம்!

சேசுவின் திரு இருதயத்தை நேசிப்பவர்கள், தேவதாயின் மாசற்ற இருதயத்தை நேசிப்பவர் ஆவர். இவ்விரு நேசமிகு இருதயங்களை நேசிப்பவர்கள் நம் தாயாகிய திருச்சபையையும் நேசிக்க வேண்டும். நமது நேசமிகு திவ்விய இரட்சகர் நமக்குக் கூறிய சுருக்கமான போதனையை நாம் நினைவில் கொள்வோம். அது "ஒருவன் என்னை சிநேகித்தால், என் வாக்கியத்தை அனுசரிப்பான்; என் பிதாவும் அவனை சிநேகிப்பார். நாங்கள் அவனிடத்தில் வந்து அவனுக்குள் வாசம் பண்ணுவோம். என்னைச் சிநேகியாதவன் என் வாக்கியங்களை அனுசரியான்" (அரு 14: 23-24). இப்போதனைகள் நமக்கு மிகுந்த ஆறுதல் அளிக்கின்றன. அவை நமது இரட்சண்யத் திட்டத்தை எளிமையான முறையில் வலியுறுத்துகின்றன. நம் தேவ தாயிடமும் இவ்வாக்கியங்களைப் பொருத்தி நம் தினசரி வாழ்வில் அனுசரித்து அவர்களின் துயரம் நிறைந்த மாசற்ற இருதயத்திலே இவ்வுலகில் வாசம் செய்யத் தேவையான வரப்பிரசாதத்தை மன்றாடுவோம்.

சேசு மரிய சூசையில் உங்கள் ஆன்ம குரு,
Rev. Fr. **ஜோசப் ராஜதுரை,** SSPX
பாளையங்கோட்டை, தமிழ்நாடு.

# திரு இருதயப் பக்தி !

## மாறாத சத்தியம் !



எக்காலமும் நாம் சேசுவின் திரு இருதயத்தின்மீது பக்தி கொண்டிருக்க வேண்டும் என்ற போதிலும், சிறப்பாக ஜூன் மாதத்தில் நம்மிடத்தில் இப்பக்தி அதிகமாய் விளங்க வேண்டுமென்று திருச்சபை கற்பிக்கின்றது. ஒருவிதத்தில் இப்பக்தியானது சமீப காலத்தில் தோன்றிய பக்தி முயற்சி எனலாம். அதாவது இப்பக்தியை பிரஸ்தபிக்கும் அடிப்படையான சத்தியங்களும், போதனைகளும் கிறீஸ்தவ வேதத்தின் ஆரம்பத்திலேயே காணக்கிடக்கின்றன. என்ற போதிலும், இப்பக்தி புத்துயிர் பெற்று விசுவாசிகள் மத்தியில் பரவ ஆரம்பித்து சொற்ப வருடங்களேயாகின்றன, சத்தியம் நிலைத்துள்ளது. திருச்சபையின் போதனைகளும் நிலையானவை; அவை காலத்திற்கும் சமயத்திற்கும் ஏற்றாற்போல் மாறக் கூடியவையல்ல. ஆனால், காலத்தின் தேவையை அனுசரித்து அவை பிரயோகிக்கப்பட்டு வருகின்றன. சகல சத்தியங்களும் ஒரே காலத்தில் ஒரே விதமாய் முக்கியத்துவம் பெற்று விளங்குவதில்லை. ஒரு கொள்கையானது குறிப்பிட்ட ஒரு காலத்தில் சிறப்புடன் விளங்குமாகில், அது திருச்சபை போதிக்கும் நூதனமான சத்தியம் என்று முடிவு கட்டக்கூடாது. ஆனால், அந்த சத்தியமானது திருச்சபையின் விசுவாச பொக்கிஷத்தில் இவ்வளவு காலமும் இருந்தது தான். ஆனால், இப்போது அதைப் பகிரங்கப்படுத்த சந்தர்ப்பம் ஏற்பட்டதினால் திருச்சபையானது அதைக் குறிப்பாகப் போதிக்கிறது என்பதுதான் கருத்து.

ஒரு வேதமானது ஜீவநாடி போன்ற தன் போதனைகளை மாற்றிக் கொண்டுவருமாகில் அது அதிக காலம் நீடிக்காது. அது மெய்யான வேதமாகாது. அதுபோலவே, வளர்ச்சிகாட்டாத வேதமும் உயிரற்ற வேதம் என்றுதான் சொல்ல வேண்டும். புராட்டஸ்டாண்டார் மத்தியிலும் நாம் சமயாசமயம் சிற்சில பக்தி முயற்சிகள் வெளிப்படுவதைக் கவனிக்கலாம். ஆனால், அலசிப் பார்க்குமிடத்து அவைகள் அவர்களுடைய கோட்பாடுகளை அனுசரித்திருக்க மாட்டாது; அவர்களுடைய போதனைகளில் இந்தப்பக்தி முயற்சிகளுக்கு யாதொரு இடமும் இருக்காது; சிலவேளை அவர்களுடைய போதனைகளே இந்தப் பக்தி முயற்சிகளைக் கண்டிக்கலாம். ஆனால் அப்படியல்ல சத்திய திருச்சபையிலிருக்கும் பக்தி முயற்சிகள், இவைகள் ஒன்றுக்கொன்று முரண்படாது. சத்தியங்களை விரோதிக்க மாட்டாது. அஸ்திவார சத்தியங்களில் யாதொரு மாற்றமும் ஏற்படுத்தமாட்டாது. சகலமும் ஒன்றோடொன்று ஐக்கியமாயிருக்கும். சகலத்திற்கும் ஒரு ஒற்றுமையைக் கொடுக்கும்.

### சினேகத்தின் வெளிப்பாடு !

17-ம் நூற்றாண்டில் நமதன்புள்ள இரட்சகர் பிரான்ஸ் தேசத்தில் பக்தியுள்ள மார்க்கரீத் மரியம்மாள் என்ற கன்னியாஸ்திரீக்குத் தரிசனமானார். அவளுக்குத் தன் இருதயத்தைத் திறந்து காட்டினார். மனிதர் அதைத் தெரிந்து மகிமைப்படுத்தும்படி அவள் உழைக்க வேண்டுமென அவர் ஆசிப்பதாக் கூறினார். மனிதர் மேல் அவருக்குள்ள அபார நேசம் அந்த இருதயத்தில் துலங்கும்படி செய்தார். அதைச் சுற்றிலும் ஒரு சிறிய முண்முடி சூழ்ந்திருந்தது; மேலே ஒரு சிலுவை காணப்பட்டது. தன் இருதயத்தின் மேல் உண்மையான பக்தி கொண்டுள்ளவர்களுக்கு நான் அபரிமிதமான நன்மை வரங்களைப் பொழிவதாகச் சொல்லி அவற்றைப் பன்னிரண்டு வாக்குறுதிகளினால் நிர்ணயித்தார்.

*ஆனால், தன் நேசத்தை வெளிப்படுத்துவதற்கு ஏன் இருதயத்தைக் காட்ட வேண்டும் என்று கேட்கலாம். அவருடைய மனுஷ சுபாவம் தேவ சுபாவத்துடன் ஒன்றித்திருந்தமையாலும், தேவ ஆளாகிய அவர் மனுஷ சுபாவமெடுத்தபடியாலும், அவரது முழுச்சரீரமும் நமது ஆராதனை வணக்கத்திற்குப் பாத்திரமானது தான். சேசுவின் திருமுகம் கடவுளுடைய முகம் ; அவருடைய கரங்களும், கால்களும் தேவனுடைய கரங்களும், கால்களுமாகும். ஐக்கியப்பட்ட இரு சுபாவங்களும் பிரிக்கத் கூடாதவையாயிருக்கின்றன. ஆகையினால் கல்லறையில் அடக்கம் செய்யப்பட்ட நமதாண்டவரின் சரீரம் நமது ஆராதனைக்கு உரிமை பெற்றது தான். அதுபோலவே அவருடைய இருதயம் தெய்வத்துடன் ஒன்றித்திருந்தமையால் நமது ஆராதனைக்கு முற்றும் உரிமைப் பெற்றிருக்கிறது.*

*சாதாரணமாக, இருதயத்தையே நாம் அன்பின் இருப்பிடமாகவும், சிநேகத்தின் அடையாளமாகவும் குறிப்பிட்டுப் பேசுகிறோம். "என்ன கல்நெஞ்சனாயிருக்கிறான் !". "அவனுக்கு இரக்கமுள்ள மனசு" என்று சொல்லுகிறோம். நல்ல இரக்க குணமுடையவன் புத்தியினாலல்ல. ஆனால், மனதினால், பட்சமுள்ள சுபாவத்தினால் காரியங்களைச் செய்கிறான். மனிதர் இருதயத்தை சிநேகத்தின் இருப்பிடமாகக் கருதுவதினால் நமதன்புள்ள இரட்சகரும் தன் இருதயத்தைக் காண்பித்து நம்மீது அவருக்குள்ள நேசத்தை விளக்கிக் காட்டுகிறார்.* **"இதோ மனுமக்களை அளவற்ற விதமாய் நேசிக்கும் இருதயத்தைப் பார் அதற்குப் பதிலாக மனிதர் அதை எவ்வளவோ அற்பமாக நேசிக்கிறார்கள்"** *என்றார். தங்களை அவர் எவ்வளவு நேசிக்கிறார் என்பதை மனிதர் ஒரு சிறிது அறிவார்களாகில் தங்களது பிரதியன்பை அவர் முறையிடாத விதத்தில் காட்டிக்கொள்வார்கள். அவர் மனுமக்களைக் கவனிக்கிறார்; தன்னுடைய நேசத்திற்கு எப்படி பதில் நேசம் காண்பிக்கிறார்கள் என்று பார்க்கிறார். ஆனால், மனிதரில் அநேகர் அதைப் புறக்கணிக்கிறார்கள். பலர் அதில் யாதொரு ஆர்வத்தையும் காண்பிக்கிறதில்லை. அதை வெறுக்கிறவர்களும் சொற்பமல்ல. ஆகையால் நேச பைத்தியம் கொண்ட அவர் மனுமக்களைக் கடைசி முறையாகத் தட்டியெழுப்பச் சித்தம் கொண்டார். தன்னுடைய இருதயத்தைக் காட்டியாவது அவர்களுடைய மனதை இளகச் செய்து அதில் கொஞ்சமாவது சிநேகம் சுரக்கச் செய்யலாம் என்று தீர்மானித்தார். மனிதரை எவ்வளவு அணைகடந்த அன்புடன் நேசிக்கிறார் என்பதைப் பட்டவர்த்தமானமாய்க் காட்டினார். மனிதர் தனக்குப் பிரதியன்பு காட்டாததைப் பற்றியும், வெகு வருத்தத்துடன் தெரிவித்துக் கொண்டார். மனிதரின் இந்த நன்றியற்ற அசமந்தம் அவர் மனதை எவ்வளவாகப் புண்படுத்துகிறது என்பதை நாம் அறிய வேண்டுமென்று அவர் ஆவல் கொள்கிறார். நாம் அவரை நேசிக்க வேண்டுமென்று தாகம் கொள்கிறார்.*

## நாம் நேசிப்போம்!

*நாம் அவரை நேசியாதிருப்பது அவருக்கு மாபெருந்துயரத்தை வருத்துவிக்கும் என்பது உண்மைதானே? நாம் நன்றி கெட்டவர்களாயிருந்தும் சேசுவின் திருஇருதயம் நம்மைக் குற்றஞ்சாட்டப் பின்வாங்குகிறது. அறியாமையினால் இவர்கள் நன்றி செலுத்தவில்லையென்று அவர்சாக்கு சொல்லிவிடுகிறார்.*

*நாம் சேசுவின் நேசத்தை ருசிபார்ப்போமானால் அவர் அன்பில் லயித்துவிடுவோம் என்பதற்குச் சந்தேகமில்லை. நம்மீது அவர் கொண்டுள்ள நேசத்தை அறிவதினால் நாம் அவருக்கு பதில் நேசம் காட்டுவோம். நமது நேசம் வெகு சொற்பமாயிருந்த போதிலும் அவருக்குப் பெருத்த ஆறுதலை வருவிக்கும். எப்பொழுதும், விசேஷமாய் இந்த ஜூன் மாதத்தில் நாம் அவருடைய நேசத்தில் வளர்ச்சியடைய முயலவேண்டும். மற்றவர்களும் அவரை நேசிக்கும்படி பிரயாசைப்பட வேண்டும்.*

*- இக்கட்டுரை அர்ச் சவேரியார் ஞானதூதன், 1942 ஜூன் இதழிலிருந்து எடுக்கப்பட்டது.*

**சேசுவின் திரு இருதயமே,**
**நாங்கள் உம்மை அதிகமதிகமாக நேசிக்கச் செய்யும் !**

*- மரியாயே வாழ்க.!*



# சேசுவின் திருமுகப் பக்தியின் வெளிப்பாடு!

**"என் திருமுகத்தை, நித்திய பிதாவிற்கு ஒப்புக் கொடுத்து வேண்டிக் கொள் பவர்களுக்கு, எதுவும் மறுக்கப்படாது ; அநேக பாவிகளின் மனந்திரும்பு தலையும் பெற்றுக் கொள்வார்கள். . ."**

*(நமதாண்டவர் சங். மரியாயின் பீற்றர் சகோதரிக்கு வெளிப்படுத்தியது)*

சேசுவின் திருமுகப்பக்தியானது நமதாண்டவர் கல்வாரிக்கு சிலுவையை சுமந்து கொண்டு சென்றபோது, வெரோனிக்கம்மாள் அவரது திருமுகத்தைத் துடைத்து ஆறுதல் அளித்ததிலிருந்து துவங்கியது எனலாம். சிலுவைப் பாதையின் 6-ம் ஸ்தலத்தில், வெரோனிக்கம்மாளின் இந்த பரிகார முயற்சி திருச்சபையால் நினைவு கூறப்படுகிறது. சேசுவின் திருமுகம், அவர் அனுபவித்த கொடூர பாடுகளையும், மனுமக்களின் பாவங்களால் அவர் அனுபவிக்கும் வேதனை, சலிப்புக்களையும் ளிெப்படுத்தும் குறியீடாகத் திகழ்கிறது.

அந்த திருமுகம் சேசுவின் திரு இருதயத்தின் உணர்வுகளின் வெளிப்படாகத் திகழ்கிறது என்றால் மிகையாகாது. மேலும் சுருக்கமாகக் கூறினால், வேற்ருவாகி வேதனை யனுபவிக்கும் சேசுவின் திருமுகம் மனுக்குலத்தின் பாவாக்கிரமங்களின் தூஷணங்கள் நிந்தைகளின் வெளிப்பாடாகத் திகழ்கின்றது என்றே கூற வேண்டும்.

திருச்சபையில் ஆதித்துவக்கத்திலேயே சேசுவின் திருமுகப் பக்தி காணப்பட்டாலும் பிந்திய காலமாகிய 19-ம் மற்றும் 20-ம் நூற்றாண்டுகளில் மீண்டும் துளிர்த்து வளரத் துவங்கியது. அதன் துவக்கமாகத் தான் 19-ம் நூற்றாண்டில் பிரான்ஸ், தூர்ஸ் நகர் கார்மெல் சபையின் சங். மரியாயின் அர்ச். பீற்றர் சகோதரிக்கும் : 20-ம் நூற்றாண்டில் இத்தாலி அமல உற்பவ மாதா சபையின் சகோதரி மரியா பியரினா மிச் செல்லி (Maria Pierina de Micheli) என்ற கன்னிகைக்கும் நமதாண்டவர் தமது திருமுகப் பக்தியையும், அதன் அவசியத்தையும் வெளிப்படுத்தி உலகமெங்கும் பரப்பும்படியான அலுவலையும் வழங்கினார். திருச்சபையும் இதனை அங்கீகரித்து அனேக ஞானபலன்களை வழங்கி விசுவாசிகள் இந்த உந்நதமான பக்தியை அனுசரித்து, நிந்தை அவமானங்களால் நொந்துபோயுள்ள நமதாண்டவருக்கு பரிகார ஆறுதல் வழங்கி, அது வழங்கும் தேவ இரக்கத்தையும், பாவ மன்னிப்பின் வரப்பிரசாதங்களையும் உலகிற்கு பெற்றுத் தர ஊக்குவிக்கிறது.

## I. சங். மரியாயின் அர்ச். பீற்றர் சகோதரிக்கு வெளிப்படுத்தப்பட்ட சேசுவின் திருமுகப்பக்தி !

*பிரான்ஸ் நாட்டின் தூர்ஸ் நகரின் கார்மெல் சபை கன்னிகையான சங். மரியாயின் அர்ச்.பீற்றர் சகோதரியை தேர்ந்தெடுத்து நமதாண்டவர் தமது திருமுகப் பரிகாரப் பக்தியை வெளிப் படுத்தினார். 1843-ம் ஆண்டு ஆகஸ்ட் 26-ம் நாளன்று, உலக மக்களின் பாவங்களாலும், தூஷணங்களாலும் தமது திரு இருதயம் கொடூரமாய் காயப்படுவதையும், அதற்கு பரிகாரமாக அன்பினால் செய்யப்பட்ட* **"செம்பொன் அம்பு" (Golden Arrow)** *என்ற பரிகார ஜெபத்தால் மகிழ்விக்கும் படியாகக் கேட்டார். அதற்கான ஜெபத்தையும் கற்பித்தார்.*

## செம்பொன் - தங்க அம்பு பரிகார செபம்

**"சர்வேசுரனின், அதிமிகத் தூயதும், மகா புனிதமானதும், மிகவும் ஆராதனைக் குரியதும், மறைபொருளானதும், விவரிக்க முடியாததுமான திருநாமம், பரலோகத்திலும், பூலோகத்திலும், நரகத்திலும் உள்ள கடவுளின் எல்லா சிருஷ்டிகளாலும், பீடத்தின் மிகவும் பரிசுத்த தேவதிரவிய அனுமானத்தில் மீட்பராம் சேசு கிறீஸ்துவின் திரு இருதயத்தைப் போலவும் எப்போதும் புகழப்படவும், துதிக்கப் படவும், நேசிக்கப்படவும், ஆராதிக்கப்படவும் மகிமைப்படுத்தப்படவும்கடவதாக."** *- ஆமென்.*

*இந்த அற்புதமான பரிகார ஜெபத்தை செம்பொன் - தங்க அம்பு என்று குறிப்பிட்ட நமதாண்டவர் அதனை பாவ நிந்தனை தூஷணமாகிய நச்சு அம்பிற்கு மாற்றாகக் கேட்டார். நச்சு அம்பினால் குத்தப்பட்ட தமது இருதயத்தை சினேகத்தாலும், பக்தியாலும் இரக்கத்தோடும், பரிகார உணர்வோடும் இந்த பரிகார ஜெபமாகிய தங்க அம்பினால் குத்தி ஊடுருவி தம்மை மகிழ்விக்கும்படி கேட்டார். இதனால் சேசுவின் திரு இருதயத்திடமிருந்து பாவிகள் மனந்திரும்புதலின் வரப் பிரசாதங்களை அளவற்றவிதமாய் பெறுவார்கள் என்றும் வாக்களித்தார்.*

*(சேசுவின் மீதான தேவ சினேக முயற்சியின் வெளிப்பாடே இந்த ஜெபம் என்பதை அறிவோமாக. ஆர்.)*

## மீறப்படும் முதல் மூன்று கட்டளைகள்

*தேவ கட்டளைகளை மீறுவதே பாவம் தேவ கட்டளைகளை அனுசரிப்பதானது கடவுளை நேசிப்பதற்கு அடையாளமாகத் திகழ்கின்றது. அவற்றை மீறுவது கடவுளையே உதாசிப்பதும், கீழ்ப்படியாமையாகவும் வெறுப்பதாகவும், இருக்கிறதாகையால் அது பாவமாக மாறுகிறது. தேவ கற்பனைகள் பத்தில் முதல் மூன்று கட்டளைகள் கடவுளைச் சார்ந்த, அவருக்குச் செலுத்த வேண்டிய கடமைகளைக் குறிப்பதாகவும், அவரோடு நேரடித் தொடர் புடைதாகவும் இருக்கின்றன. அவற்றை மீறுவது உடனடியாக அவரை பாதித்து தேவ நிந்தை என்ற பாவமாகிவிடுகிறது.*

*அவை : 1.* **"உனக்குக் கர்த்தாவான சர்வேசுரன் நாமே. நமக்கு முன்பாக உனக்கு வேறே சர்வேசுரன் இல்லாமல் போவதாக..."** *என்ற முதல் கற்பனை நம்மை சிருஷ்டித்து, காத்துவரும் கடவுளை தந்தையாக ஏற்றுக் கொள்வதில் அடங்கியுள்ளது. இது அவரைத் தவிர வேறு கடவுளை வணங்குவதைத் தடை செய்கிறது.*

2. **“சர்வேசுரனுடைய திருநாமத்தை வீணாகச் சொல்லாதிருப்பாயாக...”** *இது கடவுளுடைய பரிசுத்த நாமத்தை சங்கை மரியாதையின்றி வீணாகச் சொல்வதும், அவசங்கை, வீண் சத்தியம், தேவ தூஷணம், சாபம், வார்த்தைப்பாடுகளை மீறுதல் போன்றவற்றைத் தடை செய்கிற தேவ கட்டளை.*

3. **“சர்வேசுரனுடைய திருநாட்களை பரிசுத்தமாக அனுசரிக்க மறவாதிருப்பாயாக...”** *இந்த 3-ம் கட்டளை கடவுளுடைய திருநாட்களாகிய ஞாயிற்றுகிழமைகளிலும், கடன் நாட்களிலும் கடவுளுக்கு விசேஷ ஆராதனை செய்து, அந்த நாட்களைத் தகுந்த முறையில் பரிசுத்தமாய் செலவிட வேண்டும். மாறாக, இந்த நாட்களில் பூசைக்குச் செல்லாதிருத்தல், அடிமை வேலை (கூலிக்கு செய்யும் வேலை) பொதுவாக பொருட்களை வாங்குவது, விற்பது, கோர்ட் நடவடிக்கைகள் மற்றும் உடல் வருத்தி செய்யப்படும் உழைப்பு போன்றவற்றை இக்கட்டளை தடை செய்கிறது. (காண்க : கத்தோலிக்க ஞான உபதேச கோர்வை பக் 322 to 378)*

*இந்த கட்டளைகள் மீறப்படுவதையே நமதாண்டவர் சகோதரி மரியாயின் அர்ச். பீற்றருக்குச் சுட்டிக் காட்டி முறைப்பாடு செய்தார். அவை தேவ கோபத்தை மூட்டுவதையும், தேவ நீதியை அவமதித்து தண்டனையை உலகிற்குக் கொண்டு வருவதையும் வெளிப்படுத்தினார். குறிப்பாக சர்வேசுரனுடைய திருநாட்களை பரிசுத்தமாய் அனுசரிக்கப்படக் கேட்கும் 3-ம் கற்பனை மீறப்படுவதைக் குறிப்பிட்ட நமதாண்டவர்* **“யூதர்கள் என்னை வெள்ளிக்கிழமையன்று** *சிலுவையில் அறைந்தார்கள். ஆனால், கிறீஸ்தவர்கள் என்னை ஞாயிறன்று சிலுவையில் அறைகிறார்கள்.”* என்று வேதனையோடு கூறினார். *(குறிப்பு இந்த 3-ம் கற்பனை மீறப்படுவதை சமகாலத்தில் அதாவது, 1847 செப்டம்பர் 19-ம் நாளன்று சலேத்தில் தேவமாதா தோன்றி, எச்சரித்துள்ளார்கள் என்பதை நினைவுகூர்வோமாக.)*

*1847 -லிலேயே இக்கட்டளை மீறப்படும் போக்கு தேவ கோபத்தை மூட்டியதென்றால், இன்று, இந்த நவீன 21-ம் நூற்றாண்டில் இக்கட்டளை எவ்வளவு தூரம் மோசமான வகையில் மீறப்பட்டு வருகின்றன. அவை கடவுளை எந்த அளவுக்கு வேதனைப்படுத்தும் என்பதையும், அவைகளால் மூட்டப்படும் தேவ நீதியின் தண்டனைகள் எத்தகையதாக இருக்கும் என்பதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும் ! - தொடரும்.*

*- மரியாயே வாழ்க.!*

## கடவுளுடைய சித்தம் !

“நான் ஒவ்வொரு நாளும் எனது சித்தத்தை தூள்தூளாக்க முயல்வேன். ஏனெனில் கடவுளின் பரிசுத்த சித்தத்தையே நான் நிறைவேற்ற விரும்புகிறேன்; என்னுடையதையல்ல . . .”
- அர்ச். வியாகுல மாதாவின் காபிரியேல்

“பரிசுத்ததனம் என்பது கடவுளின் சித்தத்தை மட்டுமே நிறை வேற்றுவதில் அடங்கியுள்ளது. கடவுள் நம்மை எப்படி இருக்க விரும்புகிறாரோ அப்படி இருப்போமாக!”
- அர்ச். குழந்தை சேசுவின் தெரேசாள்

# உலகம் திருந்த வேண்டும் - பாத்திமா மாதாவின் வேண்டுகோள்!

**மாதா அப்போஸ்தலர் சபையின் ஸ்தாபகர் Late சங்.அந்தோனி சேவியர் சுவாமிகள் எழுதிய இக்கட்டுரை, உலகயுத்தப் பேரச்சம் நிலவிவரும் இக்காலத்தில் பாத்திமா மாதாவின் செய்திகளுக்கு செவிமடுத்து, அத்தாயின் மாசற்ற இருதயத்தின் அரவணைப்பில் வாழ நம்மைத் தூண்டும் என்பதில் சந்தேகமேயில்லை. ஆ.ர்.**



*மனம் திரும்பிய வாழ்விற்கு என்னிடம் வாருங்கள் என்பதே பாத்திமா அன்னையின் முக்கிய வேண்டுகோள். இது புதிய ஏற்பாட்டில் நாம் காணும் வேண்டுகோள் தான் (மத் 4 : 17) - அது முதல் சேசுநாதர்,* **"தவம் செய்யுங்கள், ஏனெனில் மோட்ச இராச்சியம் சமீபித்திருக்கிறது"** *என்று பிரசங்கிக்கத் தொடங்கினார். மனந்திரும்புங்கள் - கடவுளிடம் திரும்பி வாருங்கள்; தவம் செய்யுங்கள் ஏனெனில் மோட்ச இராச்சியம் சமீபித்திருக்கிறது. இவையே சுவிசேஷத்தின் செய்தியாகும். இதே வேண்டுகோள் பாத்திமாவிலும் எதிரொலிக்கிறது. தேவதாய் சுவிசேஷ போதனையைத் தான் திரும்பத் திரும்ப நினைவூட்டுகிறார்கள். ஆனால் நமதன்னை நமக்கு நினைவூட்டிக் கூறும் செய்தியில் உள்ள நுணுக்கத்தை நாம் உணர வேண்டும். கிறீஸ்துவின் சித்தத்தை மாதா நம்மிடம் பின்வருமாறு கூறுகிறார்கள்: அவரது விருப்பத்தின்படியான மனந்திரும்புதலை என்னிடம் வராமல் உங்களால் அடைந்து கொள்ள முடியாது. விசுவாசத்தினால் என்னுடைய மாசற்ற இருதயத்தில் வாசஞ் செய்யாமலும், என்னுடைய மத்தியஸ்தம் இல்லாமலும், அதாவது என்னுடைய தாய்மை வழியாக அல்லாமல் வேறுவழியில் நீங்கள் மனந்திரும்புதலை பெற முடியாது. உத்தம கிறீஸ்தவ வாழ்க்கைக்குத் திரும்புகிற மனமாற்றத்தை என் வழியாகவே நீங்கள் அடைய முடியும். இது கடவுளின் சித்தம். என்னுடைய சித்தமல்ல. என்பதாகவே பாத்திமாவில் மாதாவின் வேண்டுகோள் ஒலிக்கிறது.*

**"கடவுள் உலகில் என்னுடைய மாசற்ற இருதய பக்தியை ஏற்படுத்த விரும்புகிறார்"** *என்று நமது அன்னை கூறியபொழுது, உண்மையில் உலகை நான் ஆளவேண்டும் என கடவுள் ஆசிக்கிறார் என்றே மாதா கூறினார்கள் என்பதை கோடிட்டுக் காட்ட விரும்புகிறேன்.*

*இவ்விடத்தில் பக்தி என்ற பதத்தைப் பற்றி ஒருசில கருத்துக்களை கூற விரும்புகிறேன். பக்தி என்பது கிறீஸ்தவ வாழ்வுடன் ஒன்றித்த பக்தி முயற்சிகளைப் பின்பற்றுவது என்பது பொருளல்ல, கிறீஸ்தவ வாழ்வுக்குப் பிரியமான, நியாயமான பக்தி முயற்சிகளைக் குறை கூறுவது எனது நோக்கமல்ல. உண்மையான பக்தி என்பது பக்தி முயற்சிகளைச் செய்வதுடன் நின்று விடாது, சுவிசேஷத்தின் நிறைவேற்றமான வாழ்க்கை வாழ்வதே உண்மையான பக்திவாழ்வு.* **"பக்தி"** *என்ற வார்த்தையின் லத்தீன் மூலம்* **DEVOTIO. DEVOVERE** *என்ற வினைச்சொல்லுக்கு* **DEDICARE,** *அதாவது* **அர்ப்பணித்தல்** *என்பதே பொருள். ஒப்புக் கொடுத்தல், கையளித்தல் அல்லது அர்ப்பணித்தல் என்று கூறலாம். ஆகவே உண்மையான பக்தியுள்ள வாழ்வு என்பது முழு அர்ப்பண வாழ்வு தான்! மரியாயின் மீது உண்மையான முழுமையான பக்தி கொள்ளுதல் என்றால் மாதாவுக்கு நம்மை உண்மையுடனும், முழுவதுமாகவும் அர்ப்பணித்தல் என்பதே பொருளாகும். அதாவது நம் இருதயத்திலும், ஏன், உலகமெங்கிலும் மாதா ஆட்சிபுரிய கையளித்து விட்டுக் கொடுப்பதே உண்மையான மாதா பக்தியாகும்.*

## பாத்திமா மாதாவின் வேண்டுகோளின் தனித்தன்மை!

*மாதா நம்மிடம் என்ன கேட்கிறார்கள்? எதை எதிர்பார்க்கிறார்கள்? நம் வாழ்வில் சுவிசேஷத்தின் நிறைவேற்றத்திற்குரிய மனந்திரும்புதலை மாதா வழியாக அடைவதையே நம்மிடம் நமதன்னை கேட்கிறார்கள் - எதிர்பார்க்கிறார்கள். அதற்கு நாம் செய்ய வேண்டியது ஒன்றுதான். நம்மையே அத்தாயிடம் அர்ப்பணித்து அவர்கள் நம்மில் ஆட்சிபுரிய அனுமதிக்க வேண்டும்! இது நம் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் - நிலையிலும் நிறைவேற வேண்டும்.*

*மாமரியின் இந்த வேண்டுகோளை எல்லாக் கிறீஸ்தவர்களும் ஏற்க வேண்டும். சகல மனிதர்களின் பாவங்களையும், விசேஷமாய் அடிப்படைப் பாவமாகிய கடவுள் மறுப்பு நாஸ்தீகத்தையும் வெற்றிக் கொள்ளும்படியே இந்த வேண்டுகோள் விடுக்கப்படுகிறது. இந்த நாஸ்தீகத்தைப் பரப்பும் முக்கிய கருவியாக ரஷ்யா இருப்பதை நாம் கவனிக்க வேண்டும். எனவே பாத்திமா மாதாவின் வேண்டுகோளின் சிறப்பு அம்சமாக இருப்பது :* **கம்யூனிச ரஷ்யாவை மரியாயின் மாசற்ற இருதயத்திற்கு அர்ப்பணம் செய்யவேண்டுமென்ற நிபந்தனையே ஆகும்!** *இந்த அர்ப்பணத்தை பாப்பரசர் உலகில் உள்ள எல்லா கத்தோலிக்க ஆயர்களுடனும் சேர்ந்து செய்யவேண்டும். இதுவரை செய்யப்பட்ட அர்ப்பணங்கள் மரியாயின் வேண்டுகோளைப் பூரணமாக பூர்த்தி செய்யவில்லை. (சமீபத்தில் 2022 - மார்ச் 25-ல் பாப்பு பிரான்சிஸ் அவர்களால் செய்யப்பட்ட அர்ப்பணம் உட்பட - ஆர்.) இவற்றில் மோட்சம் விதித்துள்ள நிபந்தனைகள் பூரணமாக அனுசரிக்கப்படவில்லை.*

*திருச்சபையின் அப்போஸ்தல அதிகாரிகள்* (Apostolic Herarchy) *ஐக்கியமாக இணைந்து ரஷ்யாவை மரியாயின் மாசற்ற இருதயத்திற்கு அர்ப்பணிக்க வேண்டும். இந்த அர்ப்பணத்தை பாப்பரசர் ஆயர்கள் மட்டுமின்றி ஞானஸ்நானம் பெற்ற ஒவ்வொருவரும் செய்யவேண்டும்.*

*உலகில் இப்போது உள்ள குழப்பத்திற்கும் பயங்கரவாதம் பரவிவருவதற்கும் (ரஷ்ய - உக்ரேன் போர் ஆ.ர்.) காரணம் என்ன? ஏன், உலகம் இக்கால இறுதியின் அழிவை நெருங்கிக் கொண்டிருக்கிறது? ஏனெனில், பாத்திமாவில் நமதன்னையின் வழியாகவும், பின்னர் சகோதரி லூசியாவின் வழியாகவும் வெளியிடப்பட்ட கடவுளின் விருப்பத்தை நாம் பணிந்து பயனுள்ள பதில் அளிக்கத் தவறி விட்டோம்.*

## உலகம் காப்பற்றப்படுவது மாமரி வழியாக மட்டுமே!

*மாமரியின் வழியாகவே தவிர வேறு வழியாலும் உலகம் காப்பாற்றப்பட முடியாது. அதற்கு, சர்வேசுரன் பாத்திமாவில் கேட்பவற்றை நிறைவேற்றுவதே வழியாகும். பாத்திமா அன்னையின் அறைகூவலுக்குப் பணிவதன் மூலமாகத் தவிர, வேறு வழிகளில் உலகில் அமைதி ஏற்பட முடியாது. அதற்கான முயற்சிகள் அனைத்தும் வீண்! அவை தோல்வியே அடையும். ஏனெனில் சர்வேசுரன் தம்முடைய சித்தத்தை இவ்விதமாய் வெளியிட்ட பின்னர், மனிதன் தன்னிச்சையாக வேறு வழியைத் தேடக்கூடாது.*



*பாத்திமா செய்திகளில் இந்த வேண்டுகோளே, முக்கியமான கருப்பொருளாக அமைந்துள்ளது. இந்த வேண்டுகோளின் அடிப்படையில் நாம் மாமரியாயின் மீது கொள்ள வேண்டிய பக்தி என்றால் என்ன என்பதை கண்டுணர வேண்டும். அதைக் கண்டுபிடித்தால்தான் பாத்திமா செய்தியின் ஆன்மீகத் தன்மை (Spirituality) என்ன என்பதை அறியமுடியும். அதுவே மாதாவுக்கு முழுவதும் அர்ப்பணிக்கப்பட்ட வாழ்வு, அதுவே மரியாயிடத்தில் வாழ்வதாகும். இதுதான் பாத்திமா செய்தியின் ஆன்மீக இரகசியம். இதை அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்டின் வார்த்தைகளில் சுருக்கமாக இப்படிக் கூறலாம் : "நமது எல்லா செயல்களையும் சேசுவின் வழியாக, சேசுவுடன், சேசுவுக்காக செய்வதற்கு ஏதுவாக அவைகளை மரியாயின் வழியாக, மரியாயுடன், மரியாயிடத்தில், மரியாயிக்காக" செய்யவேண்டும். (மரி.மீது. உண். பக்தி எண் 257)*

## இறுதி வெற்றி!

*பாத்திமாவில் வெளிப்படுத்தப்பட்ட மற்றொரு உண்மை. இறுதி வெற்றியைப் பற்றிய அறிவிப்பும், வாக்குறுதியும் ஆகும். பாத்திமா செய்தி கடுமையானது, கனமானது, துயரமானது. இவையெல்லாம் இருந்த போதிலும் அது ஒரு மிகுதியான நம்பிக்கையின் செய்தியாக இருக்கிறது*

*என்பதை உறுதியாகச் சொல்ல முடியும். இந்த இறுதி வெற்றியை நமதன்னை அறிவிக்கும் விதத்தைச் சிறிது சற்று கவனியுங்கள்.* **“. . . ஆனால், இறுதியில் எனது மாசற்ற இருதயம் வெற்றி பெறும்”** *- ஏன் இந்த அறிவிப்பில்* **“ஆனால்”** *என்ற சொல்? ! ஏனென்றால், தனது வேண்டுகோள் நிறைவேற அதிக கால தாமதம் ஆகும் என்று நமதன்னைக்குத் தெரியும். மேலும்* **“. . .இறுதியில். . .”.** *என்ற சொல் ஏன் உபயோகிக்கப்படுகிறது? ஏனெனில், அன்னையின் கோரிக்கைகள் (ரஷ்ய ஐக்கிய அர்ப்பணமும், பரிகாரப்பக்தியை நிறுவுதலும். ஆ.ர்.) நிறைவேற்றப்படாமல் மறுதலிக்கப்பட்டு, நிறைவேறக் காத்திருக்கும் கால கட்டத்தில் பாவமும், அதன் கொடூரமான விளைவுகளும் அதிகரிக்கும். இவ்வாறாக, இறுதி வெற்றியைப் பற்றி அறிவிக்கும் அதே வாக்கியத்தில், மனித இனம் அனுபவிக்க இருக்கும் துன்பங்கள், தண்டனைகள் பற்றிய அறிவிப்பும் பொதிந்து இருப்பதை நாம் அறியலாம்.*

*நாம் எப்பொழுதும் சிலுவையை நினைவில் கொள்ள வேண்டும். கிறீஸ்துவின் பாடுகளைத் தியானிக்க வேண்டும். ஆனால், கிறீஸ்துவின் பாடுகளை அவரது உயிர்ப்பின் ஒளியிலே தியானிக்க வேண்டும். இதை நாம் செய்வதற்கு உதவியாகத் தான் நமதன்னை,* **“ஆனால், இறுதியில் எனது மாசற்ற இருதயம் வெற்றி பெறும்.”** *என்ற வாக்குறுதியை அளிக்கிறார்கள். இறுதி வெற்றியைப் பற்றி அறிவிக்கும் இந்த செய்திதான் பாத்திமா செய்தியை,* **நம்பிக்கையின் செய்தியாக - வெற்றியின் செய்தியாகக்** *காட்டுகிறது. நம்பிக்கையைத் தட்டி எழுப்பும் நமது அன்னையின் இந்த தீர்க்கதரிசன வார்த்தைகளில் தான் நம் அன்றாட கிறீஸ்தவ வாழ்வுப் போராட்டத்தைத் தொடருவதற்குப் பலமும், ஊக்கமும் பெறுகிறோம். உலகம் நாஸ்தீக பாவத்தில் ஆழமாக மூழ்க, மூழ்க, கிறீஸ்தவ வாழ்வின் போராட்டங்களும் மிகவும் கடினமானதாகும். இதைப் பற்றி சந்தேகமே வேண்டாம். கம்யூனிஸ்ட் ரஷ்யாவின் பிடியில் சிக்கிய கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் தலைவிரித்தாடும் கொடுமை நம்மையும் தண்டிக்க வரும். ஏனெனில் மரியாயின் மாசற்ற இருதயத்தின் வழியாக நம்மைக் காத்துக் கொள்ள வேண்டும் என்ற கடவுளின் சித்தத்திற்கு நாம் செவிசாய்க்கவில்லை; பதில் அளிக்கவில்லை.*

*ஆகையால், சமீபத்திலிருக்கும் எதிர்காலத்தில்* **திருச்சபையின்** *சிலுவையே நமக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இந்தச் சிலுவை நமக்கு உயிர்ப்பின் ஒளியிலே காணப்படுகிறது. ஆகையால் தான். பாத்திமா செய்தி நம்பிக்கையின் செய்தியாக, சமாதானத்தின் செய்தியாக, வலிமையின் செய்தியாக, மேலும் சொல்லப்போனால், மகிழ்ச்சியின் செய்தியாக இருக்கிறது. ஏனெனில் இது இறுதி வெற்றியின் செய்தி! மேலும் இந்த வெற்றி அன்பின் வெற்றியாகும். இதயம் என்ற சொல்லின் பொருளே அதுதான். என்னுடைய இருதயம் வெற்றி பெறும் என்றால் அன்பு வெற்றி என்றுதானே பொருள்.*

*இந்த அன்பின் வெற்றி - மரியாயின் மாசற்ற இருதய வெற்றி விரைவில் உலகில் துலங்க மன்றாடுவோமாக!*

*- மரியாயே வாழ்க.!*

ஆண்டவருக்கு நன்றி கூறுவோம் ...! அக மகிழ்ச்சிக் கொள்வோமாக !!

# நமக்கு ஒரு அர்ச்சிஷ்டவர் கொடுக்கப்பட்டுள்ளார்!!

# இந்தியாவின் அர்ச்சிஷ்டப் பட்டம் பெற்ற முதல் பொதுநிலையினர் வேதசாட்சி

# தேவசகாயம் பிள்ளை




நேயர்களே, மாதாவின் பிள்ளைகளே ! 2022, மே மாதம் 15 - ம் நாளன்று நமக்கெல்லாம் பெருமகிழ்ச்சி - உவமை தரும் மாபெரும் நிகழ்வு ரோமையில் நிகழ்ந்துள்ளது! ஆம்! அன்று நமது பரிசுத்த பாப்பரசர் பிரான்சிஸ் அவர்களால் நமது தமிழ் மண்ணின் மைந்தரும், இந்தியருமாகிய வேதசாட்சி முத்திபேறு பெற்ற **தேவசகாயம் பிள்ளையவர்கள்** அர்ச்சிஷ்டப்பட்டம் வழங்கப் பட்டு, பீட வணக்கத்துக்கு உயர்த்தப்பட்டுள்ளார்.!

இந்த சுபநிகழ்வு தமிழர்களாகிய நமக்கும், நமது இந்திய திருநாட்டிற்கும் அளவில்லாத பரலோக ஆசீர்வாதங்களையும், கிறீஸ்துவின் அபரிமிதமான வரப்பிரசாதங்களையும் கொண்டுவரும் என்பது நிச்சயம். புது அர்ச்சிஷ்டவரின் வீர விசுவாசம் நிறைந்த வாழ்வும், அவரது வேதசாட்சிய சான்றும் நமது நாட்டை கிறீஸ்துவின் விசுவாச ஒளியால் நிரப்பி மனந்திருப்புவதாக!

270 ஆண்டுகளாக “பெரிய வேதசாட்சி” என்றும், “அர்ச்சிஷ்டவர்.” என்றும், நம்மால் அன்போடு அழைக்கப்பட்டு வந்த முத். தேவசகாயம் பிள்ளையின் தளராத வீர வைராக்கிய விசுவாசம் நமக்கு புத்துயிர் அளித்து, நமது கிறீஸ்தவ வாழ்வுக்கு உறுதுணையாக இருக்கும். நமது மன்றாட்டுக்களையும், ஜெபங்களையும் பரிவோடு தேவ சமூகத்துக்கு முன் சமர்ப்பிக்க நமக்கு, ஒரு உந்நத பரிந்துரையாளராக அவரை சர்வேசுரன் தந்ததற்காக நன்றி கூறி மகிழ்வோம்.

**“விசுவாசம் மிக்க பொதுநிலையினர் முத். தேவசகாயம் பிள்ளை. . .”** என்று அழைத்து **“இந்தியாவிலுள்ள திருச்சபையின் மகிழ்ச்சியில் கிறீஸ்தவர்கள் இணைந்து கொள்ளுங்கள் என்றும், அவரே, உந்நதமான மாபெரும் தேசத்தில் கிறீஸ்தவர்களின் விசுவாசம் தழைக்க மன்றாடுவாராக. !”** என்று 16-ம் ஆசீர்வாதப்பர் பாப்பரசர் கூறியதை நினைவில் கொள்வோமாக ! (2012, டிசம்பர் 2-ம் நாள் வத்திக்கானில் திரிகால ஜெப உரை)

## அர்ச். தேவசகாயம் பிள்ளையின் வாழ்க்கைக் குறிப்பு

நமது தமிழ்நாட்டில், கன்னியாகுமரி மாவட்டம், குழித்துறை மேற்றிராசனத்தில் நட்டாலம் என்ற ஊரில் 1712-ம் ஆண்டு ஏப்ரல் 23-ம் நாளன்று நீலகண்டன் பிறந்தார். கல்வியிலும் நற்குணத்திலும் சிறந்து விளங்கியவர், அந்நாட்டு அரசன் மார்த்தாண்டவர்மனின் இராணுவத்தில் சேர்ந்து, பல்வேறு பதவி உயர்வுகளைப் பெற்று அரசனின் நம்பிக்கைக்குரிய அதிகாரியாக உயர்ந்தார் தெய்வபக்தி கொண்ட அவர் பார்கவி அம்மாளை திருமணம் செய்தார்.

## தளபதி டிலனாயுடன் நட்பு

அக்காலத்தில் டச்சுக்காரர்களும், ஆங்கிலேயரும் சேர நாட்டின் பகுதிகளைக் கைப்பற்றுவதில் போட்டியிட்டனர். அரசன் மார்த்தாண்டன் ஆங்கிலேயரைச் சார்ந்திருந்து, டச்சுக்காரர்களுக்கு எதிராக 1741-ல் நடந்த குளச்சல்துறைமுகத் தாக்குதலில் வென்று, அவர்களின் தளபதி **எஸ்தாக்கியுஸ் பெனடிக்ட் டிலனாய்** உள்ளிட்ட 23 பேரை சிறைப் பிடித்தான். டிலனாயின் திறமைகளைக் கண்ட அரசன் அவருக்கு விடுதலை வழங்கி தனது படையினருக்கு ஐரோப்பிய போர்ப் பயிற்சிகளை வழங்கும்படி அமர்த்திக் கொண்டான். அச்சமயத்தில் உதயகிரி கோட்டையைக் கட்டும் பணியை மேற்பார்வையிடும் நீலகண்டபிள்ளையும், டிலனாயும் நண்பர்களாயினர். நற்குணம் கொண்ட பிள்ளைக்கு டிலனாய் மெய்யங்கடவுள் சேசு கிறீஸ்துவையும் அவரது வேதத்தையும் (கத்தோலிக்க திருச்சபை) அறிமுகம் செய்து, போதித்தார். தேவ அருளால் விசுவாச ஒளி பெற்றுக் கொண்ட நீலகண்டப்பிள்ளை மனம் மாறினார்.

## தேவசகாயமான நீலகண்டன் !

பத்மநாபபுரத்திலிருந்து 33 கி.மீ தொலைவில் இருக்கும் வடக்கன்குளத்திற்குக் கால்நடையாகப் பயணம் செய்த நீலகண்டன் அதன் பங்குதந்தை சங். புத்தாரி சுவாமியால் 1745 மே 14-ம் நாளன்று **“லாசர்”** என்ற பெயரில் ஞானஸ்நானம் பெற்றார். லாசர் என்ற சொல்லுக்கு “தேவ உதவி - கடவுளின் உதவி” என்று பொருள். அதனைத் தமிழ் மொழியில் **தேவசகாயம்** என்று மாற்றி தம்மை அழைத்துக்

கொண்டார். கிறீஸ்தவ சத்தியங்களில் உறுதியடைந்த தேவசகாயம் பிள்ளை உள்ளூர் உயர் ஜாதி வேற்று மதத்தவர்களின் கடுமையான எதிர்ப்புக்களைச் சந்தித்தார். விரைவில் அவரது மனைவியும் **"திரேசா - அதாவது ஞானப்பூ"** என்ற பெயரில் ஞானஸ்நானம் பெற, எதிர்ப்புக்கள் கடுமையாகி, அவர் மீது அவதூறுகள், பொய் குற்றங்கள் கூறத் துவங்கவே அரசன் அவரை வரவழைத்து "கிறீஸ்தவ மதத்தை விட்டுவிடும்படி" கட்டளையிட்டான். ஆனால், அதனை நயமாகவும், உறுதியாகவும் மறுத்துவிட்ட தேவசகாயம் பிள்ளை சிறையில் அடைக்கப்பட்டார். மனம் மாறும் வரை சித்திரவதை செய்ய உத்தரவிட்டான் அரசன். 3 ஆண்டுகள் இந்த கலாபனையைப் பொறுமையோடு அனுபவித்த தேவசகாயம் பிள்ளை விசுவாச உறுதியைக் காண்பித்தார்.

## வேதசாட்சியம் !

வேதத்தை கைவிட மறுத்த தேவசகாயம் பிள்ளை பல்வேறு பொய்குற்றங்கள் சாட்டப்பட்டு மரண தண்டனை தீர்ப்பு பெற்றார். இதன்படி நாகர்கோவில் ஆரல்வாய்மொழிக்கு அருகேயுள்ள காற்றாடி மலைக் காட்டில் 1752 ஜனவரி 14-ம் ஆம் நாளன்று சுட்டுக் கொல்லப்பட்டு, வேத சாட்சிய முடி பெற்றார். மரிக்கும்போது "சேசுவே மரியாயே...! " என்று உச்சரித்து தம் உயிரைக் கையளித்தார்.

## அர்ச்சிஷ்டப் பட்டம் !

தேவசகாயம் பிள்ளைக்கு புனிதர்பட்டம் வழங்கும் முயற்சிகள் 1756-லிருந்தே மேற்கொள்ளப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் வத்திக்கானின் இசைவு 2003 - டிசம்பர் 22-ல் வழங்கப்பட்டு அவரது வேதசாட்சியத்தைப்பற்றிய ஆய்வு துவங்கப்பட்டது. 2006 - ல் "இறை ஊழியர்" பட்டமும், 2012 பிப்ரவரி 7-ம் நாளன்று விசுவாசம் பற்றிய வெறுப்பினால் - (Odium fidei - hatred of the faith) அவரது மரணம் நிகழ்ந்தது என்று முடிவு செய்யப்பட்டு, 2012 மே 8-ல் வத்திக்கான் கர்தினால்மார்கள் அமர்வால் அங்கீகரிக்கப்பட்டது.

2012 ஜூன் 28-ல் பாப்பரசர் 16-ம் ஆசீர்வதப்பரின் அங்கீகாரம் அதிகாரப் பூர்வமாக அறிவிக்கப்பட்டு, அதே ஆண்டு டிசம்பர் 2-ம் நாளன்று "முத்திபேறு பெற்றவர்" பட்டம் வழங்கப்பட்டது. பாப்பரசர் பிரான்சிஸ் அவர்களால் வேதசாட்சி முத். தேவசகாயம் பிள்ளை 2022 - மே 15-ம் நாளன்று "அர்ச்சிஷ்டவர்" என்று அறிவிக்கப்பட்டு, பீட வணக்கத்துக்கு உயர்த்தப்பட்டார்.

- ஆதாரம் : Vatican News 13 நவ 2021 , 16 : 34

**இந்திய திருநாட்டின் முதல் பொதுநிலையினர் - வேதசாட்சியான அர்ச். தேவசகாயம் பிள்ளையே எங்களுக்காக வேண்டிக்கொள்ளும் !**

- மரியாயே வாழ்க.!

# தேவ மாதாவை அறிந்து கொள்வோம்!

**தேவதாயை நம்மால் அறிந்து கொள்ள ஒருபோதும் முடியாது. "Nun Quam Satis de Maria - மரியாயைப் பற்றி போதிய அளவு ஒருபோதும் கூறமுடியாது. அறிந்து கொள்ள முடியாது''. என்கிறார் அர்ச். பெர்நார்டு ! ஆனால், அவர்கள் நமக்கும் தாய் என்கிற முறையில் நமதன்னையின் உயர்வுகளை மகிமை பிரதாபங்களை அறிய நமக்கு உரிமை உள்ளதல்லவா? தேவ வரப்பிரசாதம் அனுமதிக்கும் அளவுக்கு நாம் முயற்சிக்கலாம் தானே? அந்த மனப்பான்மையோடு இக்கட்டுரையை தியானியுங்கள். ஆ.ர்.**

**ஆறாம் சலுகை**

## மாதா சுதனாகிய சர்வேசுரனின் கன்னித்தாயாயிருக்கும் மகிமை



**"கன்னிகையானவள் கற்பமாகி மகவைப் பெறுவாள்! அது மனுவேலன் என்னும் அபிதானம் பெறும்''.** *(இசை 7 : 14)*

*இவ்வுலகில் எங்கும் என்றும் யாருக்குமே கொடுக்கப்படாத ஒரு சிறந்த பாக்கியத்தை நம் மாதாவுக்கு கடவுள் கொடுத்தார். அதுவே* **தேவசுதனின் கன்னித் தாயாயிருக்கும்** *மிகப் பெரும் பாக்கியம்.*

*எந்த மனிதனும் தன் தாயைத் தெரிந்து கொள்வதில்லை. சுதனாகிய சர்வேசுரன் ஒருவரே இவ்வுலகில் பிறப்பதற்குத் தன் தாயை தெரிந்து கொண்டார் என்று அர்ச். அல்போன்ஸ் லிகோரியார் கூறுகிறார். சிருஷ்டிக்கப்பட்ட பெண்கள் அனைவரிலும் அவர் மரியாயைத் தம் தாயாகத் தெரிந்தெடுத்தாரென்றால், மாதாவின் மகிமையை எவ்வாறு எடுத்துரைப்பது?*

*"கிறீஸ்துநாதர் தாம் பூமிக்கு இறங்கிவர ஒரு பாத்திரத்தை பூலோகத்திலிருந்தல்ல, பரலோகத்திலிருந்து தெரிந்தெடுத்தார். அதை அவர் புனிதத்தின் ஆலயமாக அர்ச்சித்தார்" என்று அர்ச்சிஷ்ட அம்புரோஸ் உரைக்கிறார்.* (De Inst. Virg. C-5)

*ஆதாம் முழு மனிதனாகப் பூமியில் தோற்றுவிக்கப்பட்டது போல் சேசுவும் தோன்றியிருக்க முடியும். ஏனென்றால் கடவுளால் எல்லாம் கூடும். ஆனால் அவர் தமக்கென ஒரு தாயைத் தெரிந்து கொண்டார்; தூய கன்னி மரியாயைத் தன் அன்னையாக்கிக் கொண்டார் என்று புனிதர்கள் கூறுகிறார்கள். தாம் ஒரு குழந்தையாகி "அம்மா" என்று கூப்பிட ஓர் தாயை முன் கூட்டியே தயாரித்துக் கொண்ட சேசு, அத்தாய்மீது எத்தகைய அன்பு வைத்திருக்க வேண்டும்!*

*மாமரி கடவுளின் தாய் என்பது நம் விசுவாச சத்தியமாகும். திரியேக கடவுளின் மூன்று ஆட்கள், அவர்களில் சுதனே ஜெனிப்பிக்கப்படுகிறவர். நித்திய ஜெனிப்பித்தலால் சுதனாயிருக்கிறவர், காலத்தில் மரியாயிடம் ஜனனமாகிறார்!*

*இந்த ஜனனத்தினால் மாதாவுக்கும், சேசுவுக்கும்* **இரத்த உறவு** *உண்டாயிற்று, தன் கடவுளுடன் மாம்சப் பிரகாரம் இரத்த உறவு கொண்டிருக்கும் மாதாவை நாம் எப்படி சிந்தித்து எப்படி மகிமைப்படுத்தப் போகிறோம்?!. இவ்மகிமையை வார்த்தையால் எடுத்துச் சொல்ல இயலாது. மனதால் சிந்தித்தாலும் மெய்மறந்து தன்னை இழப்பதன்றி வேறொன்றும் நம்மால் கூடாது.*

*கடவுளுடன் இரத்த உறவு கொண்ட மாதா கன்னிகையாயிருப்பது ஆச்சரியமல்ல, அதுவே இயல்பு. அதுவே தகுதி. கடவுள் யாரையாவது எதற்கும் தெரிந்தெடுத்தால் அவர்களை அதற்குத் தகுதி உள்ளவர்கள் ஆக்குகிறார் என்பது வேதசாஸ்திரிகள் கூறும் முடிவு. அப்படியானால் மரியாயைத் தன் தாயாக கடவுள் தெரிந்தெடுத்தாரென்றால் அவர்களை அப்பாக்கியத்திற்கு முற்றும் தகுதியுள்ளவர்களாக ஆக்காதிருப்பாரோ? அத்திரு அன்னையைப் பழுதற்ற கன்னிகையாகக் காப்பாற்றாதிருப்பாரோ?*

*தேவதாய் சேசுவைப் பெற்றெடுக்கும் முன்னும், பெற்ற போதும், பெற்ற பின்னும் எப்பொழுதும் கன்னிமைகுன்றா மலராயிருக்கிறார்கள் என்று திருச்சபையில் தொட்டே ஏற்கப்பட்டு வருகிறது.*

*பழைய ஏற்பாட்டிலேயே இசையாஸ் ஆகமத்தில் மாதாவின் கன்னிமை இவ்வாறு முன்னுரைக்கப்பட்டுள்ளது. "ஆண்டவர் தாமே ஆக்காஸிடம் பேசத் தொடங்கி, பூதலத்தின் கீழ் என்கிலும் வான்தலத்து மேலேயாகிலும் உனக்கு ஓர் அற்புத அடையாளம் தர உன் தேவனான ஆண்டவரைக் கேள் என்றார். அதற்கு ஆக்காஸ் யான் கேளேன், ஆண்டவரை பரிசோதியேன் என்றார். அப்போது இசையாஸ் தாவீதின் வீட்டாரே கேளுங்கள் . . . ஆண்டவர் தாமே உங்களுக்கு அற்புத அடையாளம் தருவார். இதோ ! கன்னியானவள் கற்பமாகி மகவைப் பெறுவாள். அது மனுவேலன் என்னும் அபிதானம் பெறும் . . ." (இசை 7 : 10-14)*

*இத்தீர்க்கதரிசனம் புதிய ஏற்பாட்டில் கன்னி மரியாயிக்கு கபிரியேல் சம்மனசானவர் மங்கள வார்த்தை சொன்னபோது நிறைவேறியது. அர்ச். தமதிரித்துவத்தின் இரண்டாம் ஆளாகிய சுதனாகிய சர்வேசுரன் மரியாயின் கன்னியுதரத்தில் பரிசுத்த ஆவியினால் மனிதனானார்!*

*சேசு பிறந்ததும் ஒரு அற்புத நிகழ்ச்சியேயாகும். மாதா மற்றப் பெண்கள் தங்கள் பிள்ளைகளைப் பெற்றெடுப்பது போல் சேசுவைப் பெற்றெடுக்கவில்லை. வண. ஆகிர்தா மேரியும், வீரமாமுனிவரும் கூறியுள்ளது போல் ஒளியானது கண்ணாடிக்கு எந்த சேதமோ மாற்றமோ ஏற்படுத்தாமல் அதன் ஊடாக வருவது போல் சேசு அற்புதமாகப் பிறந்தார்.*

*சேசுவின் உற்பவமும் அற்புதக் கன்னி உற்பவம்: அவருடைய பிறப்பும் அற்புதக் கன்னிப் பிறப்பே!*

*மேலும் நம் அன்புத் தாயான மாமரி நித்திய கன்னிகையாகவும் இருக்கிறார்கள். துவேஷம் கொண்ட பதிதர் சிலர் பிதற்றும் தேவதூஷணத்தை இங்கு நம் அருமை மாதாவைப்பற்றிக் கூறவும் நாம் துணியவில்லை.*

*தேவதாய் முப்பொழுதும் கன்னிகையாயிருக்கிறார்கள் என்பதை திருச்சபையின் அழகிய விசுவாசத்தியமாகப் பிரகடனம் செய்த லாத்தரன் பொதுச்சங்க உரையை இங்கு தருகிறோம். 649 - ம் ஆண்டு அர்ச்சிஷ்ட முதலாம் மார்ட்டின் என்ற பாப்பரசர் இப்பிரகடனத்தைச் செய்து மாதாவின் கன்னிமை மகிமைக்கு இவ்வாறு முத்திரையிட்டார் :*

**“காலநிறைவிலே, மானிடத் துணையின்றி பரிசுத்த ஆவியின் அருளால், காலங்கள் அனைத்திற்கும் முன்பே பிதாவிடமாய்ப் பிறந்த தேவ வார்த்தையானவரையே, அமலோற்பவ கன்னிமாமரி கற்பந்தரித்து, தன் கன்னிமை குன்றாமலே அவரைப் பெற்றெடுத்தார்கள் என்றும், அவருடைய பிறப்புக்குப்பின் பழுதற்ற கன்னிகையாய் நிலைத்திருந்தார்களென்றும் பரிசுத்த வேத பிதாக்களுடன் ஒப்புக் கொள்ளாத எவனும் சபிக்கப்படக் கடவன். . . ”**

*நம் மாதா முப்பொழுதும் கன்னிகை என்ற இவ்விசுவாச சத்தியத்தை 1555 - ம் ஆண்டில் 4-ம் சின்னப்பர் என்ற பாப்பரசரும் வலியுறுத்திக் கூறினார். அதை ஆமோதித்த எட்டாம் கிளமெண்ட். பாப்பானவர் 1603 - ம் ஆண்டில் மாதாவின் கன்னிமைக் கெதிரான கருத்தைப் பதிதம் என்று வன்மையாகக் கண்டனம் செய்தார். “. . . மாதா கடவுளின் உண்மையான தாய் என்பதையும், அவர்கள் கிறீஸ்துவின் பிறப்புக்கு முன்னும், அவர் பிறக்கும் போதும், அதற்குப் பின்னும் எப்பொழுதும் நித்திய கன்னிகையாக இருந்தார்கள் என்பதையும் மறுப்பது பதிதமாகும்.” என்று அவர் குறிப்பிட்டார்.*

**கிறீஸ்துவினுடைய மாதாவே !**
**கன்னிசுத்தம் கெடாத மாதாவே !**
**துதிக்கப்படத் யோக்கியமாயிருக்கிற கன்னிகையே !**
**எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்..**

*- மரியாயே வாழ்க.!*

## மெய்க்காப்பாளர் !

அர்ச். பிலிப்பு நேரியார், நாள் தோறும் பூசைக்கு வந்து நற்கருணை வாங்கியவுடன் நன்றியறிதல் கூறாமல் உடனடியாக வெளியேறும் ஒரு இளைஞனை கவனித்து வந்தார். அவனுக்குப் பாடம் புகட்ட, அப்படி அவன் வெளியே செல்லும் போது எரியும் திரிகளோடு இரு பீட பரிசாரக சிறுவர்களை அவனுக்கு இருபக்கங்களிலும் செல்லும்மாறு ஏற்பாடு செய்தார். அதைக் கண்டு திகைத்த அந்த இளைஞன் ஏன்? என்று கேட்க அதற்கு அர்ச். பிலிப்பு நேரியார் நற்கருணை உட்கொண்ட உன்னிடம் இன்னும் மறையாமல் இருக்கும் தேவ பிரசன்னத்திற்கு சங்கையாகவே அவ்வாறு செய்தேன் என்று பதில் கூறினார்.

நன்மை வாங்கிய உடன் கால்மணி நேரமாவது அப்பத்தின் குணம்மாறும் வரை தேவ பிரசன்னம் நம்முடன் இருக்கும். அப்போது நன்றியறிதல் கூறி ஜெபிப்பது நல்லது என்பதை அவனுக்குப் போதித்தார்.

## மே மாதத்தில்

# தேவதாயை வாழ்த்தி வணங்குவோம்!

(சேசுநாதருடைய திரு இருதயத்தூதன் 1917 மே இதழிலிருந்து எடுக்கப்பட்டது. ஆ.ர்.)



*திவ்விய இரட்சகர் மனுக்குலத்தின் மீட்பின் கிரயமாய் தம் உயிரைக் கொடுக்குமளவும் மனிதரை நேசித்தார். ஆயினும் அவர் மற்றெல்லா சிருஷ்டிகளையும் விட மேலாய் நேசித்த சிருஷ்டி ஒன்றுண்டு, அதுவே, அவருடைய திவ்விய தாயாகிய கன்னிமரியம்மாள். சேசுநாதரே திருவாய் மலர்ந்து தன் "**தாய்**" என்னும் மொழியால் அழைக்கச் சித்தமான இத்திவ்விய கன்னிகையை நாமும் முழு இருதயத்தோடு நேசிப்பதை விட, அவருக்கு உகந்த காரியம் வேறொன்றுமில்லை.*

*பரிசுத்த திருச்சபையாலும், மெய்மறையோரின் பக்தியாலும், மாமரியின் வணக்கத்துக்காக ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கும். இந்த மே மாதத்தில் நாம் முன்னிலும் பதின்மடங்காய் அவர்களை ஸ்துதித்து நாம் அவர்கள் மீது வைத்த நேச உருக்கத்தைக் காண்பிக்க மாதாவின் சுகிர்த புண்ணியங்களைக் கண்டு பாவிக்கக் கடவோம். சர்வேசுரனுடைய தாயும், பரலோக பூலோக இராக்கினியும், விண்ணுலகோரும் மண்ணுலகோரும் ஸ்துதிக்கின்ற அரசியுமாகிய மாமரியை எங்ஙனம் நாம் தக்க விதமாய் வணங்களாம்?*

## தேவமாதாவின் உயர்வு!

*ஆதிபராபரன் மாமரியைத் தம் திருத்தாயாகத் தெரிந்த அப்பொழுதே, சர்வேசுரனல்லாத வேறுயாவையும் விட மேலான உந்நத மகிமையில் அவர்களை உயர்த்தினார். அர்ச். பொனவெந்தூர் சொல்லும் வார்த்தைகளைக் கேட்போம்: "அதிசயம் நிறைந்து எழில் செறிந்த இப்புவியையும், அதனினும் அழகாய் மகிமையில் சிறந்து, பரந்து விரிந்த வான லோகங்களையும் சிருஷ்டித்த கடவுள், மாட்சிமை தங்கிய தேவதாய் அடைந்த மகிமையை விட மேலான மகிமையை சிருஷ்டிக்கக் கூடாமற் போனார்!" ஆதாமின் பிள்ளைகளுக்குள்ளே மாதா மாத்திரம் விசேஷ வரத்தால் ஜென்ம மாசற்று, அமலோற்பவியாய்த் தோன்றினார்கள். மேலும் அவர்களின் அமலோற்பவத்தின் முதற்கணம் தொடங்கி வரப்பிரசாதத்தால் நிரப்பப்பட்டு, அது முதல் சகல சம்மனசுக்களுக்கும், அர்ச்சிஷ்டவர்களுக்கும் மேலாய் வரப்பிரசாதங்களிலும் புண்ணியங்களிலும் துலங்கினார்கள்.*

## மோட்ச இராக்கினி தேவதாய்!

*இன்னும் தேவதாயே சர்வேசுரனது குமாரனுடைய திருச்சரீரத்தை உண்டுபண்ணித் தன் சரீரத்திலும், இரத்தத்திலும் ஒரு பங்கைக் கொடுத்து இவ்விதமாய்ப் பூவுலகின் இரட்சணியத்தில் பங்காளியாயிருக்கும் பாக்கியம் பெற்றார்கள். மாமிசமான தேவ வார்த்தையானவரைத் தன் உதரத்தில் தரித்து, அவரைச் சீராட்டிப் பாலூட்டி வளர்த்து, முகமுகமாய்க் கண்குளிரக் கண்டு களிகூர்ந்தவர்கள் அவர்களே! அவர்களுக்கு சர்வேசுரனே சங்கை செய்கிறார்: இவ்வுலகின் சிருஷ்டிகரே அவர்களுக்குக் கீழ்ப்படிந்து அவர்களை நேசித்து வருகிறார். கடைசியாக அவர்கள் வரத்தால் ஆத்துமத்தோடும், சரீரத்தோடும் மோட்சத்துக்கு உயர்த்தப்பட்டு, வானுலக பூவுலக ஆண்டவளாக முடி சூட்டப்பட்டிருக்கிறார்கள். அதோடு அங்கே மோட்சத்தில், தன் தேவகுமாரனாகிய சேசுவின் அருகில் தூதர்களுக்கும், அதிதூதர்களுக்கும் மேலாக உயர்த்தப்பட்டு, மகிமை தங்கிய ஒரு சிம்மாசனத்தில் வீற்றிருந்து நித்திய காலமாய் ஆண்டு வருவார்கள். அத்தூதரும், அதிதூதர்களும் சர்வேசுரனுடைய ஊழியராக இருக்க, மரியாயோ அவரது தாயாயிருக்கிறார்கள்!.*

*ஓ! எவ்வளவு மாட்சிமை! பரிசுத்த கன்னிகைக்கு எத்தகைய மகிமைப் பிரதாபம்!! இதனாலல்லோ திருச்சபையானது மற்ற அர்ச்சிஷ்டவர்களுக்கெல்லாம் செலுத்தப்படும் வணக்கத்தை விட மேலான ஒரு வணக்கத்தை மரியாயிருக்குக் கொடுத்திருக்கின்றது. இந்த வணக்கத்தை விட மேலானது சர்வேசுரனுக்கு மாத்திரம் செலுத்தப்படும் ஆராதனையொன்றே.*

*நாம் ஏற்கெனவே அறிந்தாற்போல மோட்ச இராக்கினி சேசுவின் தாயாயிருப்பதினால் அவரது திரு இருதயத்தின் மேல் மகா வல்லமையுடைத்தானவர்களாய் இருக்கிறார்கள். அதே சமயத்தில் அவர்கள் நமது தாயுமாய், இரக்கம் நிறைந்த நாயகியுமாயிருப்பதினால், அவர்களுடைய இந்த வல்லமையைக் கொண்டு நமது இரட்சணியத்துக்கான வரப்பிரசாதங்களை அடைந்து கொடுக்க எவ்வளவோ ஆசிக்கிறார்கள்!*

## தேவதாயின் வல்லமையுள்ள பரிந்துரை!

*அர்ச். பெர்நார்தூஸ் நமக்குச் சொல்லியிருக்கும் இவ்வருமையான புத்திமதியின்படி நடப்போமாக, அதாவது : "உன் சகல துன்பதுரிதங்களிலும் மரியாயின் சலுகையை (உதவியை) நாடு! அவர்களது நாமம் என்றென்றும் உன் வாயிலும், இருதயத்திலும் குடிகொண்டிருக்கக்கடவது. உனக்கு நன்மை செய்ய அத்திருக்கன்னிகைக்கு இஷ்டமில்லாமலுமல்ல, மனம் இல்லாமலுமல்ல. ஏனெனில் நமது மேல் பட்சமும் (அன்பும்) தயையும் வைத்திருக்கிறார்கள். மகா வல்லமை தாங்கிய பரிபாலகியும் அவர்களே! அவர்கள் ஓர் சிருஷ்டியும், சர்வேசுரனுடைய தாயுமாய் இருப்பதனால் அவர்களது வேண்டுகோள் எப்போதும் கேட்கப்படுகிறது. சேசுநாதர் சுவாமி தம் நேசத் தாயாருக்கு யாதொன்றையும் மறுக்கமாட்டார்.."*

## சகல வரப்பிரசாதங்களுக்கும் மத்தியஸ்தி!

*நமதாண்டவர் தமது சகல வரப்பிரசாதங்களையும் மனிதர்களுக்குத் கொடுக்க மாமரியையே ஏற்படுத்தியிருக்கிறார். அவர் இவ்வுலகில் ஓர் வாலிப அரசனைப் போன்று தம் தாயின் மீது வைத்த பூரண நேசத்தினால் அவர்களது கைகளில் தன் சகல ஆஸ்தி பாஸ்திகளையும், வைத்து அவைகளைப் பிரஜைகளுக்குத் தன் இஷ்டம் போல் எடுத்துக் கொடுக்கும்படி மனப்பூர்வமாய் உத்தரவளித்திருக்கிறார். இவ்வாறு தேவதாய் சேசுவின் வரப்பிரசாதங்களைப் பகிர்ந்து கொடுக்கும் நாயகியாயிருப்பதனால் நமது இரட்சண்யம் அவர்களது கைகளில் இருக்கிறதெனில்*

*பொய்யாகுமோ? ஆகையால் தேவதாய் மீதான பக்தியானது, தெரிந்து கொள்ளப்பட்டவர்களின் நிச்சயமான அடையாளமாயிருக்கின்றது. இத்தகைய நன்மைத்தனமும், வல்லமையும் நிறைந்த தாய் தன் பிள்ளைகளிலொன்றைத் தவறவிடுவாளோ? ஒருக்காலுமில்லை! அவர்களுக்காக தன் திருக்குமாரனிடம் பரிந்து பேசி அவர்களின் பகைவரிடமிருந்து இச்சீவியம் முழுவதும் அவர்களைக் காப்பாற்றி முக்கியமாய் மரண நேரத்தில் அவர்களை இரட்சிப்பார்கள்.*

## பதிதர்களின் தண்டனை!

*இப்பொழுது நாம் சொன்னவற்றைக் கொண்டு மாமரியை வணங்காமலும், அவர்களை நோக்கி ஜெபியாமலுமிருக்கும் பதிதர்களின் நிர்ப்பாக்கியம் எவ்வாறானதென்று எளிதே கண்டுணரலாம். சர்வேசுரனது தாயாகிய பரலோக இராக்கினியை அவர்கள் தூஷிக்கவும் துணிந்தார்கள். கபிரியேல் சம்மனசானவர் எவ்வளவோ வணக்கத்துடன் வாழ்த்துதல் சொன்ன நமதாண்டவளுக்கு, எந்த நல்ல குமாரனும் தன் தாயை நேசித்ததை விட மேலாய் சேசுநாதர் நேசித்து சங்கிக்கிற திவ்விய கன்னிகைக்கு இந்த நிர்ப்பாக்கிய பதிதர் அவசங்கை செய்கிறார்கள். எக்காலத்திலும், எத்தேசத்திலும் நல்ல மகன் தன் தாய்க்குச் செய்யப்பட்ட அநீதியையும், அவசங்கையையுமே தனக்கே செய்யப்பட்டதாகப் பாவிப்பானல்லோ? இவ்வாறிருக்க இம்மனிதர்கள் சேசுநாதரின் நேசத் தாயை நிந்தித்து, அவருக்குப் பிரியமாய் நடக்கிறோமெனப் பிதற்றுவது எவ்வளவோ தப்பறையான காரியம்! மரியாயை நிந்திக்கிற இவர்கள் ஒருநாள் அவர்களுடைய குமாரனது நீதியாசனத்தின் முன்வந்து நிற்கவேண்டும். ஓ! அவர்கள் தீர்வை எவ்வளவு பயங்கரத்துக்குரியது. நேசம் நிறைந்த மகனாகிய சேசுநாதரே தம் தாயின் மகிமையினிமித்தம், அவர்களைத் தண்டிப்பார். ஏனெனில் அவர் மகிமையும் அவரது தாயின் கீர்த்தியும் பிரிக்கப்படக் கூடாதவையாயிருக்கின்றன. இதனாலல்லோ தேவ குமாரனின் தாயை நிந்தித்தவர்களின் மீது, அவரது நீதியின் பயங்கரமான தண்டனைகள் விழும்.*

## மாதாவின் பிள்ளைகளின் பிரதிக்கினைகள்!

*ஆனால், தேவதாயை சேசுவின் திருஇருதயம் நேசித்து வந்திக்கிறதுபோலே, நாமும் அவர்களை நேசித்து வந்திப்போமாக. மேலும் நமக்கு அவர்கள் மட்டிலுள்ள சிநேகத்தைக் காண்பிக்கும் பொருட்டு பின்வரும் பிரதிக்கினைகளைச் செய்வோமாக.*

*1) பாவமானது சேசுவின் திருஇருதயத்திற்கும், தேவமாதாவுக்கும் அருவருப்பான காரியமாதலால் அதை முற்றும் விலக்குவேன்.*

*2) அடிக்கடி முக்கியமாய் சோதனை நேரத்தில் அத்தாயை நோக்கி ஜெபித்து, அத்தாயின் நாமத்தை உச்சரிப்பேன். தினந்தோறும் உத்தரியத்தைப் பக்தியோடு தரித்திருப்பேன்.*

*3) அனுதினம் காலையில் அத்தாயை நோக்கி,* **"ஓ! என் நல்ல தாயே! உமக்குப் பிரியமாயிருக்கும்படி நான் இன்று முழுவதும் மாசற்றிருப்பேனாக"** என்று சொல்வேன். இப்படிச் செய்தால் நீ என்ன பரித்தியாகங்கள் செய்ய வேண்டுமென்றும், அவர்களது குமாரனுக்கு உகந்தவனாயிருக்கும் பொருட்டு, உன் ஜீவியத்தில் என்ன மாறுதல் செய்ய வேண்டுமென்றும், அத்தாய் உனக்குப் படிப்பித்து, தனது வல்லமையுள்ள பாதுகாவலில் உன்னை வைத்து உதவி செய்வார்கள்.

*சேசுவின் திரு இருதயத் தாயின் மீது முழு நம்பிக்கையும், சிநேகமும் பாராட்டி திருச்சபையோடு இச்செபத்தை அடிக்கடி சொல்வோமாக:* **"தேவதாயே நீர் எங்கள் தாயுமாய் இருப்பீராக. இஷ்டப்பிரசாதத்தின் மாதாவே, கிருபைதயாபத்தின் மாதாவே, எம் பகைவரிடமிருந்து எங்களைக் காப்பாற்றி, மரண நேரத்தில் எங்களை ஏற்றுக் கொள்ளும்."**

*- மரியாயே வாழ்க.!*

**சூசை மலர் :**

"அர்ச்.சூசையப்பரின் பரிசுத்தத்தனத்தை விசுவாசிகள் கண்டு கொள்ளும் போது வெற்றியின் முழக்கம் கேட்கப்படும்."

– அர்ச். இசோலானிஸ் இசிதோர்

# கஸ்திப்படுகிறவர்களுக்கு ஆறுதல் அர்ச். சூசையப்பர்!



"அர்ச். சூசையப்பரை திருச்சபை கஸ்திப்படுகிறவர்களுக்கு ஆறுதலே" என்று பாராட்டுகிறது.

அர்ச். சூசையப்பரின் வாழ்க்கை எப்பொழுதுமே மறைவானதாயிருந்தது. அவர், துன்பப்பட்டவர்களிடம் சென்று அவர்களுக்கு ஆறுதல் கூறியிருக்க முடியும். ஆனால், அதைப்பற்றிய வரலாறு எதுவும் நமக்கு எட்டவில்லை.

கஸ்திப்படுகிறவர்களுக்கு அர்ச். சூசையப்பர் ஆறுதளிக்கும் முறை அந்தரங்கமானது. முதலாக, ஆத்துமத்தின் அந்தரங்க வாழ்வுக்குப் பாதுகாவலாயிருக்கிற அர்ச். சூசையப்பர், ஆன்ம போராட்டங்களிலும் ஆத்தும கஷ்டங்களிலும் மறைவான முறையில் ஆறுதலளிக்கிறார். சந்தேகங்கள், குழப்பங்கள், ஏக்கங்கள், தீர்மானிக்க இயலாமை போன்ற ஆன்ம சஞ்சலங்களில் அர்ச். சூசையப்பர் ஞான வைத்தியரைப் போல் செயல்படுகிறார். லௌகீக காரியங்களுக்காக அவர் செய்யும் உதவியைவிட ஆத்தும காரியங்களில் அதிக உதவி செய்கிறார்.

இந்த உண்மையை நாம் நம் அனுபவத்தில் தான் காணமுடியும். அவரிடம் உருக்கமாக மன்றாடினால் அப்படிக் காணலாம். கஸ்திப்படுவது என்பதென்ன என்பது அவருடைய அனுவத்தால் அவருக்கு நன்றாகத் தெரியும்.

மாதா சேசுவை தன் உதரத்தில் தாங்கியிருந்த திருநிகழ்ச்சியை அறியாமல் அவர் அடைந்த சந்தேகக் குழப்பங்களும் மனப் போராட்டங்களும் சாதாரணமானவை அல்ல. அவருடைய கனவில் தேவ தூதன் வருவார் - திருப்பாலன் உயிருக்கு ஆபத்து என்று அறிவிப்பார் - எகிப்துக்கு 200 மைல் தொலைவிலுள்ள அந்த அந்நிய நாட்டுக்கு தாயையும், குழந்தையையும் கூட்டிக் கொண்டு ஓடு என்று கட்டளையிடுவார் - பின்னர் நாசரேத்திற்குத் திரும்பிப்போ என்பார். அர்ச். சூசையப்பர் மறுமொழி கூறாமல் கீழ்ப்படிவார். அவருடைய மனம் என்ன நிலையில் இருந்திருக்கும் ? என்ன பாடுபட்டிருப்பார்? ஆயினும் தேவ சித்தத்தை முழுப்பணிதலோடு ஏற்றுக் கொண்டார்.

*நம் உள்ளரங்க பிரச்சனைகளில் அர்ச். சூசையப்பரை மன்றாடும் பழக்கத்தை நாம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அது ஞான ஆன்மீகப் பிரச்சனைகளோ, இவ்வுலகப் பிரச்சனைகளோ எதுவாக இருந்தாலும் அவரை தயவோடே மன்றாடிக் கேட்க வேண்டும். அவரை நாம் போதிய அளவு இன்னும் அறியவில்லை. அறிவதற்கு அவரை நாம் இன்னும் போதிய அளவு அணுகவில்லை. மானிடரான நமது வாழ்க்கையிலும், விசேஷமாக நம் இரட்சிப்பிலும், அர்ச்சிப்பிலும் அர்ச். சூசையப்பர் ஒரு முக்கிய இடம் வகிப்பது கடவுளின் சித்தம். அப்படியில்லாவிட்டால் அவரை ஆன்ம வாழ்வின் பாதுகாவலராக திருச்சபை நமக்கு கொடுத்திராது.*

*உலகம் பசாசு சரீரம் ஆகிய நம் இரட்சண்யத்தின் மூன்று எதிரிகளுடனும் நாம் செய்யும் அந்தரங்கப் போராட்டங்களிலும், அதனால் நாம் சலிப்புற்று கஸ்திப்படும் வேளைகளிலும் அர்ச். சூசையப்பரின் பாதுகாவலை கண்டிப்பாகத் தேட வேண்டும். தேடினால் அவருடைய உதவியையும் ஆறுதலையும் அடைவோம் என்பது நிச்சயம்.*

*- மரியாயே வாழ்க!*

---

# கற்புள்ள இருதயம் திவ்ய இஸ்பிரீத்துசாந்து வசிக்கும் தேவாலயம் !

*அர்ச். லூசியா அல்லது பிரகாசியம்மாள் செல்வந்தர் குடும்பத்தில் பிறந்தவள். அவளை திருமணம் செய்ய அஞ்ஞான இளைஞன் ஒருவன் விரும்பினான். அதற்கு மறுப்புத் தெரிவித்த அர்ச். பிரகாசியம்மாளை கிறீஸ்தவள் என்று உரோமை அதிகாரிக்கு தெரியப்படுத்தினான். அவள் சிறைப் பிடிக்கப்பட்டாள். எவ்வளவு நயந்தும், அச்சுறுத்தியும் அவளை திருமணத்திற்கு இணங்க வைக்க முடியாததால் கசையால் அடித்து சித்திரவதை செய்யப்பட்டாள்.*

*அப்போது பிரகாசியம்மாள் "நான் உமக்குச் சொன்னதெல்லாம் இஸ்பிரீத்துசாந்துவின் ஏவுதலால் சொன்னேன். என்னை இனி சோதிப்பதால் எந்த பலனையும் அடையமாட்டீர்" என்று தைரியமாகச் சொன்னாள். அதற்கு அதிகாரி "இஸ்பிரீத்துசாந்து உன்னிடமிருக்கிறாரா?" என்க, "கற்புள்ள இருதயம் அவர் வசிக்கும் தேவாலயமாகும்" என்று பதிலளித்தாள். "உன் கற்பிழந்தால் இஸ்பிரீத்துசாந்து உன்னை விட்டுவிடுவாரல்லவா?" என்று சொல்லி அவளை விலைமாதர்களின் வீட்டிற்கு இழுத்துப் போகும்படி கட்டளையிட்டான். எத்தனை பேர் அவளை பிடித்து இழுத்தாலும், அவள் அசையாத தூண் போல் அங்கேயே நின்றாள். அந்த அதிசயத்தைக் கண்டு அங்கிருந்தவர்கள் திகைத்துப் போனாலும், அந்த அதிகாரி, பிரகாசியம்மாளைச் சுற்றிலும் விறகை அடுக்கி சுட்டெரிக்கக் கட்டளையிட்டான். அந்த நெருப்பும் அவளைத் தீண்டாததால் கோபயாவேசப்பட்ட அதிகாரி, இறுதியாக அவளை சிரச் சேதம் செய்யும்படி உத்தரவிட்டான். அர்ச். பிரகாசியம்மாள் வாளால் வெட்டுண்டு வேதசாட்சியமடைந்தாள்.*

# ஆண்டவரே, எங்களுக்கு அநேக பரிசுத்த கத்தோலிக்கத் குடும்பங்களைத் தாரும்

கத்தோலிக்கக் குடும்பங்கள் திருச்சபையின் அடித்தளம் போன்றது. அதிலிலிருந்து தான் திருச்சபை வளர்ந்தோங்குகிறது. பரி.தேவஅழைத்தல்களையம், வீர வைராக்கிய விசுவாசம் கொண்ட மக்களையும் உருவாக்குவதிலும் கத்தோலிக்க குடும்பங்களின் பங்கு இன்றியமையாதாக உள்ளது. இன்று இந்த நவீன உலகில் கத்தோலிக்கக் குடும்பங்கள் சீர்குழைந்து வருவதைக் காணமுடிகிறது. ஏனெனில் அவை பசாசினால் குறிவைத்துத் தாக்கப்பட்டு வருகின்றன. எனவே கத்தோலிக்க குடும்பங்கள் தங்களைக் காத்துக் கொள்ள திருக்குடும்பத்தின் பாதுகாவலில் தங்களை வைக்க வேண்டும். கத்தோலிக்க விசுவாச நல்லொழுக்கம் குடும்பங்களில் வளர குடும்பத் தலைவர்கள் கருத்தாக இருக்க வேண்டும்.

இப்பகுதியில் கத்தோலிக்க குடும்பத்தின் மேன்மை பற்றிய கட்டுரைகள் வெளியிடப்படும். அவை கத்தோலிக்க பெற்றோருக்கு பெரீதும் உதவியாக இருக்கும் என்பது உறுதி. (ஆர்.)

## மெய்யான கிறீஸ்தவக் குடும்பம்

மெய்யான கிறீஸ்தவ குடும்பம் என்பது என்ன? தெய்வபயத்துடன் கூடிய, ஒருவர் ஒருவரை நேசிப்பதிலும், பரஸ்பர உதவியில் வளரும் குடும்பமே மெய்யான கிறீஸ்தவக் குடும்பம் ஆகும். இந்த மேன்மையான குடும்பம் சில வாரங்களிலோ அல்லது சில வருடங்களிலோ கட்டி எழுப்பப்படுவதில்லை, ஏனெனில் இது உலகப் பொருட்களை மட்டுமே சார்ந்ததல்ல. அது சிநேகத்தினாலும் பிரயாசைகளின் கண்ணீர் மற்றும் வியர்வையினாலும் கட்டப்பட்ட ஒன்று. கிறீஸ்தவ குடும்பத்தில் சந்தோஷமும் இருக்கும் ; துன்பமும் இருக்கும். அது தியாகம் நிறைந்த பலி பீடமாகவும் ஆனந்தத்தை விளைவிக்கும் நகைச்சுவை நாடக அரங்கமாயும் இருக்கும். அது உழைப்பினுடையவும் ஓய்வினுடையவும் இடமாக இருக்கிறது.

உங்கள் குடும்பம் மெய்யான கிறீஸ்தவக் குடும்பமாக இருக்குமானால், அது உறுப்பினர்கள் அனைவரும் சேர்ந்து ஜெபமாலை, இரவுச்செபம் போன்ற அழகிய பக்தி முயற்சிகளையும் கொண்ட ஒரு சிற்றாலயமாகத் திகழமும். கிறீஸ்து நமது ஜீவியத்தை எந்த கண்ணோட்டத்துடன் காண விரும்புவாரோ அது போல பார்க்கப்பட வேண்டும். அதில் மிகுந்த பிரமாணிக்கமும், தேவ பராமரிப்பில் நம்பிக்கையும் இருக்கும். அதில் நேசம், கனிவு, மன்னிப்பும், மேன்மையான ஒழுக்க நெறியும், கீழ்ப்படிதல், கண்டிப்பும் இருக்கும். செல்வந்தர்களாய் இருந்தாலும், ஏழைகளாய் இருந்தாலும் பெற்றோர்களும் பிள்ளைகளும் தங்களிடம் உள்ளவைகளை தாராள மனதுடன் பகிர்ந்து கொள்கிறார்கள். குடும்பத்தினர் தேவைப்பட்டால் தங்களிடம் இருப்பதை இழக்கவும், கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டு துன்பங்களில் பொறுமையாக இருப்பார்கள்.

நல்ல கிறீஸ்தவக் குடும்பம், பிள்ளைகள் கௌரவமானவர்களாய் வாழவும் நேசிக்கவும், பிறருடைய நலனுக்காக உழைக்கவும், எவ்வித கைமாறும் எதிர்பாராமல் பிறருக்கு சேவை செய்யவும் கற்றுக் கொடுக்கும் கல்விக் கூடமாக இருக்கிறது.

மேலும் அது வெளியுலக வேலைகள், அலைச்சல்களின் பாரத்தினின்றும் சமாதானமாய் ஓய்வெடுத்து புத்துணர்ச்சி பெறும் பொழுதுபோக்கு மையமாகத் திகழ்கின்றது. அதோடு பெற்றோரும் குழந்தைகளுடன் நேரத்தை செலவிடுவது. இருவருக்கும் இடையே உள்ள கருத்து வேறுபாடுகளை களைந்து ஒருவரொருவரின் தேவைகளுக்கு அநுசரித்து வாழவும், வாழ்நாள் முழுவதும் நீடித்திருக்கக் கூடிய பாசத்தை வளர்க்கவும் அது உதவுகிறது. குடும்பத்தில் அவ்வப்போது நடக்கக் கூடிய சந்தோஷத்தை நகைச்சுவையைத் தரக்கூடிய நிகழ்வுகள் இனிமையான விரும்பத்தக்க, மிக உற்சாகமான மனிதர்கள் உருவாக்குகின்றது. இத்தகைய பண்புகளைக் கொண்ட பெற்றோர்களையும், பிள்ளைகளையும் பாரம்பரிய கத்தோலிக்க கிறீஸ்தவ குடும்பங்களன்றி நவீன கிறீஸ்தவ குடும்பங்கள் கொண்டிருப்பதில்லை.

மேலே சித்தரிக்கப்பட்ட உண்மையான கிறீஸ்தவ குடும்ப ஜீவியத்தை எப்பொழுது நீங்கள் வாழ முடியுமென்றால் திருக்குடும்பத்தின் மாதிரிகையை உங்கள் கண்முன் கொண்டிருக்கும் போது மட்டுமே! திருக்குடும்பத்தில் எளிமையையும், பரிசுத்த நடத்தையையும், உத்தமமான மன இனக்கத்தையும், பிளவில்லாத ஒற்றுமை பந்தனத்தையும், பரஸ்பர சங்கை மரியாதை சிநேகத்தையும் காண்கிறோம்.

நாசரேத்தூரில், பொறுமையான உழைப்பு உணவுக்கும், உடைக்கும் தேவையான பொருளைப் பெற்றுத்தந்தது கிடைத்த கொஞ்ச பொருளில் நிறைவு கண்டது. அதன் உறுப்பினர்கள் தேவைக்கு ஏற்ப அதைப்பூர்த்தி செய்யும் வழிகளை பெருக்கிக் கொள்ளாமல் தங்களுடைய தேவைகளையே குறைத்துக் கொண்டார்கள். இன்னும் மேலான பண்புகளான மிகுந்த மன அமைதி, ஆனந்தம், சமாதானத்துடன் கூடிய மனசாட்சி ஆகியவற்றை பெற்று திருக்குடும்பம் விளங்கியது. அதோடு நன்மைத்தனம், நிறை கற்பு, தாழ்ச்சி, கடும் உழைப்பு, பிறர் மேல் கனிவு, அனுதின வாழ்வின் சிறுகாரியங்களைச் சுறுசுறுப்புடனும், நன்றாய் செய்தல் ஆகிய அனைத்தையும் திருக்குடும்பத்தில் காண்கிறோம்.

உங்கள் குடும்பத்தின் ஒவ்வொரு உறுப்பினரும், சர்வேசுரனையும், அவர் சார்ந்த காரியங்கள் மற்றும் இவ்வுலகையல்லாத ஞானக் காரியங்கள் மீதும் கவனம் செலுத்த முனைந்தால்தான் மட்டுமே திருக்குடும்பத்தின் முன்மாதிரிகையை உங்களால் பின்பற்ற முடியும். உங்களது அனைத்து செயல்களும் சர்வேசுரனுடைய சமூகத்தில் செய்யப்படுகிறது என்ற உணர்வில் வாழ வேண்டும் நமது உண்மையான சந்தோஷம் சர்வேசுரனின் சித்தத்திற்கேற்ப ஒத்திருப்பதிலேயே இருக்கிறது என்பதை அறிய வேண்டும்.

*(*Rev. George A.Kelly *எழுதிய* "The Catholic Family Hand book" *என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது.*

*- மரியாயே வாழ்க.!*

---

## அனைவருக்குமானது!

**"புனிதர்களாவது ஒரு சிலருக்கான சலுகையல்ல. மாறாக, அது ஒவ்வொருவருக்கமான அழைத்தல் !"**

– பாப்பரசர் பிரான்சிஸ்

# தூக்குமர நிழலிலே!

## (இங்கிலாந்து நாட்டில் புராட்டடஸ்டாண்ட் பிரிவினையின் போது கத்தோலிக்க விசுவாசத்துக்காக வேதசாட்சியமடைந்தவர்களின் வரலாறுகள்)

முன்னுரை

**"வேதசாட்சிகளின் இரத்தம் திருச்சபையின் வித்து** - *என்பது திருச்சபையின் நடைமுறையா நிலவி வந்துள்ளது என்பதை அதன் நீண்ட 2000 ஆண்டுகால வரலாறு எண்பிக்கிறது. முதல் மூன்று நூற்றாண்டுகளில் ரோமைய அஞ்ஞான அரசர்கள் மூட்டிய கலாபனைகளில் எண்ணற்ற விசுவாசிகள் இரத்தம் சிந்தி திருச்சபைக்கு உரமூட்டினர். அதற்குப் பின் பல்வேறு காலங்களில் ஆங்காங்கே எதிர்ப்புகள் காணப்பட்டாலும், 16-ம் நூற்றாண்டில் தோன்றிய புராட்டடஸ்டாண்ட் எதிர்ப்பு. நமதாண்டவரின் "தையலில்லா ஆடையான" கத்தோலிக்கத் திருச்சபையில் பெரும் பிரிவினையை உண்டுபண்ணி, இன்றுவரை தீராத கறையை ஏற்படுத்தி வருகிறது.*




## இங்கிலாந்து பிரிவினை!

*16-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் ஜெர்மானிய "எதிர்ப்பு" குருவான மார்டின் லூத்தர் மற்றும் அவரைத் தொடர்ந்த கால்வின் போன்றோர் தங்கள் சொந்த யூகங்களால் என்றும் மாற்றப்பட முடியாத சத்தியங்களை ஆராய முயன்று தங்களது கத்தோலிக்க விசுவாசத்தை இழந்து போனார்கள். தங்களது மாறுபாடான தப்பறைகளைப் பரப்பி திருச்சபையில் பிரிவினையை ஏற்படுத்தினார்கள். அவர்களது நச்சுப் போதனைகள் ஐரோப்பா நாடுகளை தீண்டி, பிளவை உண்டாக்கின. அப்போது இங்கிலாந்தின் அரசனாக இருந்த 8-ம் ஹென்றி லூத்தரின் தப்பறை தன் நாட்டினுள் நுழையாமல் காத்து பாப்பரசரிடம் "திருச்சபையின் காவலன்" என்ற பட்டத்தையும் பெற்றான்.*

*ஆனால், அந்தோ பரிதாபம்! சுயநலத்தாலும், ஆங்காரத்தாலும் பீடிக்கப்பட்ட ஹென்றி மோக பொறியினுள் சிக்கி திருச்சபையின் பகைவனாகிப் போனான்! தனது மனைவியை விலக்கி விட்டு, ஆசை நாயகியை மணமுடிக்க விரும்பிய அரசன், அனுமதி மறுத்த திருச்சபையின் தலைமையை - பாப்பரசரை எதிர்த்து - மறுத்து தனது விருப்பத்தை நிறைவேற்றி வேத விரோதியானான். அதோடு மட்டுமல்லாது,*

கோபாவேசம் கொண்டு "கத்தோலிக்கத் திருச்சபையை தனது நாட்டிலிருந்தே வேரோடு - வேரடி மண்ணோடு அழிக்கத் தேடினான். பாப்பரசரின் தலைமை ஸ்தானத்தையும், அவரது ஞான அதிகாரத்தையும் மறுத்து இங்கிலாந்தில் திருச்சபைக்குத் தலைவன் தானே என்று பிரகடனப்படுத்தி பிரிவினையை ஏற்படுத்தினான். எதிர்பு - புராட்டஸ்டாண்ட் பதித ஆங்கிலிக்கன் புதிய மதத்தை உண்டு பண்ணினான்.

அவனது இந்த அநியாய போக்கினை எதிர்த்த - ஏற்க மறுத்த ஆயர்கள், குருக்கள், துறவியர் மற்றும் விசுவாசிகளைக் கொன்று குவித்தான். அவனது கொடுங்கோல் ஆட்சியால் கத்தோலிக்க மக்கள் அனுபவித்த கொடுமைகள் கொஞ்சம் நஞ்சமல்ல.

## கொடூர கலாபனை!

8-ம் ஹென்றி இயற்றிய பல்வேறு அடக்குமுறைச் சட்டங்களை சற்றுப் பார்ப்போம்.

1. இங்கிலாந்தில் திருச்சபையின் தலைவர் அரசரே, உரோமையிலுள்ள "போப்" என்பவருக்கு இங்கிலாந்தில் எந்த விதமான அதிகாரமும் இல்லை. இதனை ஏற்காதவர்களுக்கு தூக்குத் தண்டனை.
2. நற்கருணை திவ்ய பலிபூசை தேவதிரவிய அனுமானம் இங்கிலாந்தில் தேவையில்லை. அதனை நிறைவேற்றுபவருக்கும், அதில் பங்கு பெறுவோர்க்கும் மரண தண்டனை.
3. இங்கிலாந்தில் குருக்களுக்கு அவசியமில்லை. குருத்துவப் பணிகள் தடை செய்யப்பட்டன. கத்தோலிக்க குருக்கள் திருப்பலி நிறை வேற்றுகையில் பிடிபட்டால் தேவ துரோகம். அதற்கு மரண தண்டனை தான்!

இந்த அடக்குமுறையான சட்டப் இங்கிலாந்தில் விசுவாசிகளிடையே பெரும் கொந்தளிப்பை உண்டாக்கியது. எதிர்த்த உத்தம கத்தோலிக்கர்கள் கலாபனைகளுக்கு உட்பட்டார்கள். எண்ணற்ற பேர் தங்கள் குருதியை சிந்தி வேதசாட்சிய மடைந்தார்கள் இக்காலக்கட்டத்தில் தங்களது கத்தோலிக்க விசுவாசத்துக்காக உயிர் கொடுத்த வேத சாட்சிகளை பின் வருமாறு வகைப்படுத்தலாம்.

1. 8-ம் ஹென்றியால் 1534-ம் ஆண்டு முதல் 1547-ம் ஆண்டு வரையிலும் கொல்லப்பட்டவர்கள்.
2. 8-ம் ஹென்றிக்குப் பிறகு அவனது மகள் முதலாம் எலிசெபத் அரசியின் காலத்தில் (1558 - 1603) வேதசாட்சியமடைந்தவர்கள்.
3. முதலாம் ஜேம்ஸ் அரசன் காலத்தில் (1603-1648) வேதசாட்சியமடைந்தவர்கள்.
4. உள்நாட்டுப் போர் தொடங்கிய 1642-ம் ஆண்டு முதல் அது முடிந்த 1648 - ம் ஆண்டு வரையிலும் சாட்சியம் அளித்தவர்கள்.
5. 2-ம் சார்லஸ் அரசனது ஆட்சி தொடங்கிய 1660 - ம் ஆண்டு முதல் அவனது ஆட்சி முடிந்த 1685-ம் ஆண்டு வரையிலும் சாட்சியம் தந்தவர்கள். 1678-ல் நிகழ்ந்த டைட்ஸ் ஓட்ஸ் என்பவரின் சதியால் கொல்லப்பட்டவர்கள்.

## இழைக்கப்பட்ட கொடுமைகள் !

புராட்டஸ்டாண்ட் பிரிவினையை ஏற்காதவர்கள் "தேசத்துரோகிகள்" என்று குற்றம் சாட்டப்பட்டு லண்டன் நியூகேட் டவர் என்ற சிறைச்சாலையில் அடைக்கப்பட்டனர். சிறைவாசம் மிகுந்த கொடுமை நிறைந்தது. அடிப்படை வசதிகள் எதுவும் இல்லாமல் துர்நாற்றமும், அசுத்தமும் நிரம்பியதும், காற்றோட்டம் இல்லாததுமான இருண்ட

அச்சிறைச்சாலையில் மூடுவதற்கு போதிய உடையின்றி கிறிஸ்தவர்கள் அடைக்கப்பட்டார்கள். போதுமான உணவு வழங்கப்படாமலும், நோயுற்றால் கவனிப்பார் இல்லாமலும், அவதியுற்றனர். நீதிமன்ற விசாரணைக்குச் செல்ல வேண்டியிருந்தால் கைகளில் விலங்கிட்டு ஈவு இரக்கமில்லாமல் இழுத்துச் செல்லப்பட்டனர். குற்றம் சாட்டப்பட்டவர்களிடம் “உண்மைகளை” (?) வரவழைக்க என்ற வாதைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டன. அதன்படி, கைதிகள் படுக்கவைக்கப்பட்டு, அவர்களது கைகால்களைக் கட்டி இழுத்து சித்திரவதை செய்யும் கொடூரம் நிகழ்ந்தன. மேலும் கனமான கதவுகள் போன்ற பெரிய பலகையை உடலின் மேல் வைத்து, அதன்மீது பாரமான எடைகளை - பொருட்களை வைத்து நசுக்கிக் கொல்வது என்ற முறையும் பின்பற்றப்பட்டது.



கொலைகளத்துக்கு இழுத்துச் செல்லப்படும் போது நீண்ட பலகைச் சட்டத்தோடு மாட்டப்பட்டு குதிரைகளால் கரடுமுரடான தரைமீது இழுத்துச் செல்லப்பட்டனர். கொலை தண்டனை நிறைவேற்றப்படுபவர்கள் ஒன்றுக்கு மேற்பட்டவர்களாக இருந்தால் வண்டிகளில் ஏற்றிச் செல்லப் படுவார்கள். கொலைகளத்தில் தூக்கு மரத்தில் தொங்கும் சுறுக்குக் கயிற்றை தங்கள் கழுத்தில் மாட்ட கைதிகள் ஏணியில் ஏறிச்செல்ல வேண்டும். கழுத்தில் சுறுக்கு கயிற்றை மாட்டியபின் ஏணியை அகற்றி தூக்குக் கயிற்றால் கழுத்தை நெறிக்கச் செய்து கொலை செய்யப்படுவர்.



தூக்குக் கயிற்றில் சிலர் உயிர் போகும் வரை தூக்குமரத்தில் தொங்கவிடப்படுவர். அதற்கு அரசனின் சிறப்பு கருணை வேண்டும்! வழக்கமாக கைதிகள் தூக்கில் தலையை மாட்டியபின் உயிர்பிரிவதற்கு முன்பாகவே அவர்களது பார்வையிலேயே வயிற்றை வகுந்து இதயத்தைப் பிடுங்கி எறியும் கொடூரம் நடக்கும் !! பல தடவைகளில் உயிர் போகும் முன்பாகவே உடலைத் துண்டுதுண்டாக வெட்டி தலையை லண்டன் “பாலத்தில்” பொது மக்கள் பார்க்கும்படி மாட்டி வைக்கும் அவலமும் நடைபெறும். உயிர் பிரியும் முன்பாகவே வயிற்றைக் கிழித்து, உள்உறுப்புக்களைப் பிடுங்கி கூறுபோடும் போது வேதசாட்சிகள் எத்தகைய வேதனைகளை அனுபவித்திருப் பார்கள் !! ஆ! நினைக்கும் போதே நமது நெஞ்சம் பதறுகிறதே.

ஆதித்திருச்சபையில் உரோமை கலாபனையில் கூட கிறீஸ்தவர்கள் இத்தகைய கொடூரச் சாவை சந்தித்திருக்கமாட்டார்கள். ஆனால் நாகரீகம் வளர்ந்து உயர்சிந்தனைகள் மேலோங்கியிருந்த அந்த 16-ம் நூற்றாண்டில் இப்படி காட்டுமிராண்டித்தனமான - மனிதாபிமானமே சிறிதும் இல்லாத குரூர தண்டனைகளை கத்தோலிக்க கிறீஸ்தவர்கள் அனுபவித்தார்கள்.

இவையெல்லாம் எதற்காக? ! தாங்கள் கொண்டிருந்த சத்திய கத்தோலிக்க விசுவாசத்திற்காக ! அதற்கு பிரமாணிக்கம் காத்ததற்காக! கத்தோலிக்க திருச்சபையின் பாப்பரசரின் தவறாத தலைமைக்கு விரோதமாக எழுந்த புதிய

எதிர்ப்பு வேதமான புராட்டஸ்டாண்ட் பதிதத்தை ஏற்க மறுத்ததற்காக அல்லவா நம் வேதசாட்சிகள் இத்தகைய கொடூர வேதனைகளை அடைந்து உயிரைக் கொடுத்தனர் !

## நமக்குப் படிப்பினை!

ஆனால், இன்று கத்தோலிக்க விசுவாசம் எப்படியிருக்கிறது? எல்லா மதங்களும் ஒன்றுதான். புராட்டஸ்டாண்ட் பெந்தேகோஸ்த் சபையினரும் சேசுவைத் தானே வழிபடுகிறார்கள் - போதிக்கிறார்கள். அவர்கள் நமது "பிரிந்த சகோதரர்கள்" அல்லவா? என்று கூறிக் கொண்டே புராட்டஸ்டாண்ட் துப்பறைகளை ஏற்றுக் கொள்ளும் மனப்பான்மை பெருகியுள்ளதல்லவா? சத்திய கத்தோலிக்க விசுவாசத்தை எளிதாக காற்றிலே பறக்க விட்டு விட்டு பெந்தகோஸ்தே பதித சபைகளில் ஐக்கியமாகும் மக்கள் எத்தனை! எத்தனை? ! அதோடு கூட நமது திருச்சபையிலேயே அதிகாரிகளின் மத்தியிலே "எக்குமெனிசம் - சமய ஒன்றிப்பு" என்ற தப்பறை புகுந்து கத்தோலிக்க மக்களைக் குழப்பி விசுவாசமிழக்கச் செய்து வரும் கொடுமைகள் வேறு!

நேயர்களே! நாம் இரட்சண்யமடைய நமது சத்திய கத்தோலிக்க விசுவாசம் அவசியம்! சத்தியமார்க்கமாகிய கத்தோலிக்கத் திருச்சபையிலே தான் சேசுகிறீஸ்து இருக்கிறார்.

நாம் மோட்சமடைய அவர் ஏற்படுத்திய ஒரே வழி - மார்க்கம் - வேதம் கத்தோலிக்கத் திருச்சபையே! திருச்சபைக்குப் புறம்பே இரட்சண்யமில்லை. நாம் மீட்படைய கத்தோலிக்க திருச்சபை மட்டும் தான் உண்டு! நாம் நமது பரிசுத்த கத்தோலிக்க விசுவாசத்துக்குப் பிரமாணிக்கமாயிருப்போமாக! கத்தோலிக்க ஞான உபதேச கல்வியை சரிவரக் கற்று, நமது பிள்ளைகளுக்கும் கற்பித்து விசுவாசத்தில் உறுதியடைவோம். அதற்கு துணையாக - படிப் பினையாக - ஆங்கில நாட்டில் புராட்டஸ்டாண்ட பிரிவினைக்கு மறுப்பு தெரிவித்து தங்களது கத்தோலிக்க விசுவாசத்தில் உறுதியாக இருந்து வீரத்துவம் காட்டிய வேதசாட்சிகளின் வரலாறுகளை **"தூக்குமர நிழலிலே!"** என்ற தலைப்பில் வெளியிட முடிவு செய்துள்ளோம்.

வேதசாட்சிகளின் இத்தொடர் கத்தோலிக்க மக்களான நமக்கு உத்வேகத்தைத் தரும் என்பதில் சந்தேகமில்ல. இந்த முயற்சியை இங்கிலாந்து மற்றும் வேல்ஸ் நாட்டில் கத்தோலிக்க விசுவாசத்துக்காக தங்களின் இன்னுயிரை தந்த வேதசாட்சிகளுக்கு அர்ப்பணம் செய்கிறோம். அவர்களே இந்த முயற்சி பலன் அளிக்க மன்றாடுவார்களாக!

ஆசிரியர்,
மாதா பரிகார மலர், தூத்துக்குடி.
- தொடரும்.

- மரியாயே வாழ்க!

---

## தேவமாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யுங்கள் !

ஆகஸ்டு 15 – பரலோகமாதா திருநாளன்று மாமரித்தாய்க்கு தங்களையே முழு அர்ப்பணம் செய்ய ஆசிப்பவர்கள், அதற்கான தயாரிப்பை ஜூலை 13–ஆம் தேதி துவக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.



# மாதாவின் சூசை அச்சக புத்தக டிப்போவில் கிடைக்கும் ஞானப் புத்தகங்கள்



PH : 0461 -2361989

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 1. | பாரம்பரிய திருக்குடும்ப பக்திமாலை | 220.00 | 260.00 |
| 2. | உலகின் இறுதிக்காலங்கள் | 125.00 | 140.00 |
| 3. | திருப்பாடுகளின் வரலாறு | 120.00 | 125.00 |
| 4. | அனுதின ஜெபப் புத்தகம் | 50.00 | 60.00 |
| 5. | திருப்பாடுகளின் தியானம் | 90.00 | 100.00 |
| 6. | அறிவோம் பத்துக்கட்டளைகளை | 100.00 | 110.00 |
| 7. | மலைமேல் பிரசங்கம் | 65.00 | 70.00 |
| 8. | அறிவோம் அப்போஸ்தலர்களை; அர்ச். பிலவேந்திரர் | 90.00 | 100.00 |
| 9. | ஞான உபதேசக் கோர்வை (3 பாகங்கள்) | 325.00 | 350.00 |
| 10. | மன்ரேசா (அர்ச். இஞ்ஞாசியாரின் தியானப் பிரசங்கங்களின் தொகுப்பு) | 125.00 | 140.00 |
| 11. | கிறீஸ்துநாதர் அநுசாரம் | 150.00 | 160.00 |
| 12. | மரியாயின் மீது உண்மை பக்தி | 125.00 | 140.00 |
| 13. | பாத்திமா காட்சிகள் | 100.00 | 110.00 |
| 14. | பாவசங்கீர்த்தனத்தின் இரகசியம் | 60.00 | 70.00 |
| 15. | சேசுவின் திருநாமத்தின் அதிசயங்கள் | 35.00 | 40.00 |
| 16. | கற்பு என் பொக்கிஷம் | 60.00 | 70.00 |
| 17. | என்னைப் படி அல்லது வருத்தப்பட்டு (உத்தரிக்கிற ஆன்மாக்கள் பற்றியது) | 30.00 | 35.00 |
| 18. | ஞான உணர்த்துதல் | 40.00 | 45.00 |
| 19. | Read Me or Rue It | 60.00 | 70.00 |
| 20. | என்னைப் படிக்காவிட்டால் நீ வருத்தப்படுவாய் | 75.00 | 80.00 |
| 21. | கத்தோலிக்க வேத சத்தியங்கங்கள் | 45.00 | 50.00 |
| 22. | இதுதான் பாத்திமா செய்தி, இதுவே பரிகார பக்தி | 35.00 | 40.00 |
| 23. | ஞான சரீரம் | 35.00 | 40.00 |
| 24. | சலேத் இரகசியம் | 35.00 | 40.00 |
| 25. | மரியாயின் இரகசியம் | 30.00 | 35.00 |
| 26. | தேவ இரகசிய ரோஜா மாதா காட்சிகள் | 30.00 | 35.00 |
| 27. | The Penny Catechism | 35.00 | 40.00 |
| 28. | அமலோற்பவ மாமரியின் போரணி | 40.00 | 45.00 |
| 29. | அன்னையை நேசிக்க பன்னிரு படிகள் | 30.00 | 35.00 |
| 30. | மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்தி முயற்சிகள் | 25.00 | 30.00 |
| 31. | முத்துக்குளித் துறையின் முதல் ஆயர் (வந். ரோச் ஆண்டகையின் வரலாறு) | 30.00 | 35.00 |
| 32. | மோட்சம், நரகம், உத்தரிக்கிற ஸ்தலம் | 35.00 | 40.00 |
| 33. | வியாகுல மாதா பக்தி | 35.00 | 40.00 |
| 34. | தலைவெள்ளி, முதல் சனி பக்தியும், ஜெபமாலையும் அனுசரிக்கும் முறை | 20.00 | 25.00 |
| 35. | உத்தரிக்கிற ஸ்தலத்துக்கு அனுதின யாத்திரை | 12.00 | 15.00 |
| 36. | காவல் சம்மனசானவர் | 10.00 | 10.00 |
| 37. | சிலுவைப்பாதை | 15.00 | 1500 |
| 38. | பரிசுத்த ஆவி ஜெபம் | 6.00 | 7.00 |
| 39. | சேசுவின் திரு இருதய மந்திரமாலை | 6.00 | 7.00 |
| 40. | தேவமாதாவின் மந்திரமாலை | 10.00 | 12.00 |
| 41. | அர்ச். சூசையப்பர் பக்திமாலை | 10.00 | 12.00 |
| 42. | அர்ச். சூசையப்பரின் மாந்தை நவநாள் | 8.00 | 12.00 |
| 43. | ஆதித் திருச்சபையின் பத்து வேதகலாபனைகள் | 10.00 | 12.00 |
| 44. | திருச்சபையின் கட்டளைகள் | 10.00 | 12.00 |
| 45. | சேசுவின் இரக்க பக்தி | 10.00 | 12.00 |
| 46. | அர்ச். பிலோமினம்மாள் ஜெபப் புத்தகம் | 10.00 | 12.00 |
| 47. | தேவ அழைத்தல்கள் | 35.00 | 40.00 |
| 48. | சின்னக் குறிப்பிடம் | 10.00 | 12.00 |

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 49. | அன்பிரவு (பரிகாரத் திருமணி ஜெபப் புத்தகம்) | 25.00 | 30.00 |
| 50. | மனச்செபம் ஒரு விளக்கம் | 35.00 | 40.00 |
| 51. | புதுநன்மைப் புனிதை (முத்திப்பேறு பெற்ற இமெல்டா வாழ்க்கை வரலாறு) | 70.00 | 75.00 |
| 52. | பரலோக எச்சரிப்பு (2 புத்தகங்களின் தொகுப்பு - அந்தோனி சேவியர்) | 60.00 | 65.00 |
| 53. | ஜெபமாலையின் இரகசியம் (அர்ச். லூயிஸ் மோன்போர்ட் எழுதியது) | 80.00 | 90.00 |
| 54. | மரியாயின் மாசற்ற இருதய வெற்றியின் உதயம் | 35.00 | 40.00 |
| 55. | 33 நாள் தயாரிப்பு: தேவமாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் முறை (தியானங்களுடன்) | 50.00 | 60.00 |
| 56. | இறுதிக்கால யுகம் | 100.00 | 115.00 |
| 57. | அர்ச். பத்தாம் பத்திநாதர் வாழ்க்கை வரலாறு | 100.00 | 115.00 |
| 58. | புதுமைப் புனிதர் தந்தை பியோ | 200.00 | 220.00 |
| 59. | வேத விளக்கம் : ஆசிரியர் : வீரமாமுனிவர் (சங். ஜோசப் பெஸ்கி, சே.ச.) | 150.00 | 160.00 |
| 60. | அன்பின் அரசர் | 150.00 | 160.00 |
| 61. | நரகம் | 60.00 | 65.00 |
| 62. | அர்ச். ரீத்தம்மாளின் ஜீவிய சரித்திரம் | 12.00 | 15.00 |
| 63. | தேவமாதாவின் பிரார்த்தனை விளக்கம் | 150.00 | 160.00 |
| 64. | புதிய நட்சத்திரம் பிலோமினா | 60.00 | 65.00 |
| 65. | அர்ச். பாஸி மரிய மதலேனாள் | 85.00 | 90.00 |
| 66. | அர்ச். ஜெர்த்ரூத்தம்மாள் | 45.00 | 50.00 |
| 67. | ஜெபமாலை ஜெபிப்பது எப்படி? | 10.00 | 12.00 |
| 68. | A Brief History of St. Mary Magdalene de Pazzi, Carmelite and Mystic | 50.00 | 55.00 |

**ஜுன் - ஜுலை மாதங்களின் முதல் சனி பக்தி முயற்சியின் பரிகாரக் கருத்துகள்**

**ஜுன் :** மாதாவுக்கு எதிராகச் செய்யப்படும் சகல நிந்தைகளுக்குப் பரிகாரமாக.

**ஜுலை :** தேவமாதாவின் அமலஉற்பவத்துக்கு எதிராகச் செய்யப்படும் நிந்தைக்குப் பரிகாரமாக.

## அன்பான வாசகர்களின் கவனத்திற்கு

1. மணியார்டர் பாரத்தில் உங்கள் தொலைபேசி / அலைபேசி எண்ணைக் குறிப்பிடுங்கள்.
2. மாதா பரிகார மலரை உங்களுக்குத் தெரிந்தவர்கள், உறவினர்கள், நண்பர்களுக்கு அறிமுகப்படுத்தி பரப்ப உதவுங்கள். (எங்களுக்கு உதவி செய்கிற உங்கள் அனைவரின் ஆன்ம சரீர நலன்களுக்காகவும் தினமும் எங்கள் ஜெபத்தில் வேண்டுகிறோம்.)
3. மாதா பரிகார மலர் ஆண்டு சந்தாவை இன்னும் புதுப்பிக்காதவர்கள் உடனே அதைப் புதுப்பித்து நம் பத்திரிகை நல்ல முறையில் வெளிவர எங்களுக்கு உதவும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். வருட சந்தா - ரூ. 150/லி கூடுதல் தபால் செலவு ஆகிறது. நேயர்கள் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.
4. மாதா பரிகார மலர் சாந்தா, காணிக்கை மற்றும் புத்தகங்களுக்கு மட்டும் கீழ்கண்ட பெயரில் உங்கள் மணியார்டர்கள், உ.உ.ள். மற்றும் காசோலைகளை அனுப்புங்கள்.

A/c Name : SOCIETY OF APOSTLES OF MARY
No. 31423199505 - IFS Code : SBIN 0008145
State Bank of India, Kanthasamypuram Branch. Tuticorin

**அனுப்ப வேண்டிய முகவரி :**

**மாதா அப்போஸ்தலர்கள் சபை,**
**ரோஸா மிஸ்திக்கா,**
**11/519 சகாயமாதா பட்டணம், 2-வது தெரு, வி.வி.டி மேல்நிலைப் பள்ளி எதிரில், தூத்துக்குடி - 628002.**

போன் : 0461 2361989, அலைபேசி : 9487609983. Email : tutirosamystica@gmail.com

**சந்தா, நன்கொடை செலுத்த :**

Google Pay **9487609983**

# உலக ஜெயராக்கினி சகாயமாதா ஆலயம்



கட்டப்பட இருக்கும் ஆலயத்தின் தோற்றம்



ஆலயத்தின் தற்போதைய கட்டுமான தோற்றம்

பாத்திமாவில் தேவ மாதா கேட்டுக் கொண்டுள்ளபடி மரியாயின் மாசற்ற இருதய பரிகாரப் பக்தியை (முதல் சனி பக்தி) கடைப்பிடித்து பரப்புவதும், மரியாயின்மீது உண்மையான பக்தியை பரப்புவதும், அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட் முறைப்படி மாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் பொருட்டு 33 நாள் தயாரிப்பைக் கடைப்பிடிக்கச் செய்து மாதா அப்போஸ்தலர்களை ஏற்படுத்துவதும், சேசுவின் திரு இருதய பக்தியை (தலைவெள்ளி பக்தி) பரப்பவும், ஜெபமாலை மற்றும் உத்தரியத்தின் மீதான பக்தியைப் பரப்பவும், ஜெபத்தையும், தவத்தையும், பரிகாரத்தையும் மக்கள் கடைப்பிடித்து வாழச் செய்வதையும், நல்ல கத்தோலிக்க புத்தகங்களை வெளியிட்டு, ஞான உபதேச அறிவையும், விசுவாசத்தையும், தேவ சிநேகத்தையும் வளர்ப்பதும் எங்கள் சபையின் நோக்கமாகும்.

**ஆலயத்தை கட்டி முடிக்க தேவையான தொகை ₹ 53,50,000/-** (535 x ₹10,000/-
**ஒரு சதுர அடி ₹ 2800/-** 1070 x ₹ 5,000) = ₹ 53,50,000/-
**மொத்த சதுர அடி (Sq. ft.) 4200**

**தங்களது உதவியை வேண்டுகிறோம்.**


**முகவரி**
மாதா அப்போஸ்தலர்கள் சபை,
(Society of Apostles of Mary)
11/519, சகாயமாதாபட்டணம், தூத்துக்குடி,
தொலைபேசி: 0461 2361989 அலைபேசி: 94876 09983
E-mail: tutirosamystica@gmail.com


**வங்கி விபரம்**

**Account Name: Society of Apostles of Mary**
**Account No. 121802000000473**
**IFS Code: IOBA0001218**
**Indian Overseas Bank,**
**Mappilaiyurani Branch, Thoothukudi.**

## அர்ச். அந்தோனியார் பிரார்த்தனை மன்றாட்டு ஜெபம்



பிதாவாகிய சர்வேசுரா சுவாமி, உமது திருச்சபையானது அர்ச். அந்தோனியாருடைய ஞான உதவியினாலே உரம் பெற்றிருக்கவும், நித்திய ஆனந்தத்தை அனுபவிக்க நாங்கள் பாத்திரமாயிருக்கவும், உம்முடைய ஸ்துதியரான முத்திப் பேறு பெற்ற அர்ச். அந்தோனியாருடைய திருநாமத்தைக் கொண்டாடுகிற நாங்கள் அவருடைய புண்ணிய மாதிரிகையை அனுசரித்துக் கொண்டு பேரின்ப மோட்ச இராச்சியத்தில் சேரவும் அனுக்கிரகம் செய்தருளும். உம்முடைய திருச்சபைக்குச் சந்தோஷம் வருத்துவிக்க வேண்டுமென்றும் தேவரீரை மன்றாடுகிறோம். இந்த மன்றாட்டுக்களையெல்லாம் சேசுகிறீஸ்துநாதருடைய திருமுகத்தைப் பார்த்து எங்களுக்குத் தந்தருளும், ஆமென்.

**அர்ச். அந்தோனியார் திருநாள்: ஜூன் - 13**



**MATHA PARIKARA MALAR**
**ROSA MYSTICA**
**(Opp. V.V.D. H. Sec. School)**
**SAHAYAMATHAPATTANAM**
**TUTICORIN - 628 002.**
**PH: 0461 - 2361989**
E-mail: tutirosamystica@gmail.com

**மாதா பரிகார மலர்**
ரோஸா மிஸ்திக்கா
வி.வி.டி. மேல்நிலைப்பள்ளி எதிரில்,
சகாயமாதாபட்டணம்
தூத்துக்குடி மேலூர் போஸ்ட் – 628 002
போன்: 0461 – 2361989

To

Printed, Published and owned by: S. Michael Joseph Kennedy , Managing Trustee cum Secretary of Society of Apostles of Mary & Keeper of Mathavin Susai Achagam (Printing Press), 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin District, Tamil Nadu.

Printed at: Mathavin Susai Achagam (Printing Press), C/o, Society of Apostles of Mary, D.No 11/510, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.

Published at: Society of Apostles of Mary, 11/510-1, Rosamystica 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.

Editor: Sammanasu Francis, C/o, Society of Apostles of Mary, 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamilnadu.